

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத்தமிழ் செய்யுமாறே.

# கந்தரலங்காரம்

மூ. திருவிளங்கம் உரை

யாழ்ப்பாணம்
கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம்

ஓம்



# கொழும்பு விவேகானந்த சபை

அகில இலங்கைச் சைவசமய பாடப் பரீட்சை–197.2

## பாடசாலைப் பரிசில்

பெயர் : நா. சுதந்திரவேணி

வகுப்பு : ஆறு

பாடசாலை : மட் / வந்தாறுமூலை மத்திய மகாவித்தியாலயம்

பரீட்சைச் செயலாளர்.

கொழும்பு-13.

ஏழுலகம் - பூலோகம். புவலோகம். சுவலோகம்
ஜனலோகம், தவலோகம், மகாலோகம்.
சத்திய லோகம்.

யா. கூ. த. நூ. ப. வி. க. வெளியீடு - 8

உ
சிவமயம்

அருணகிரிநாதர்
அருளிச் செய்த

# கந்தரலங்காரம்

கொழும்பு, திரு. மு. திருவிளங்கம் உரை




வெளியீடு:
யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்
411 / 1, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம்.

முதற் பதிப்பு: 1970 (கழகம்)
படிகள்: 1000


விலை ரூபா: 2-50

---

J. C. T. B. P. S. S. PUBLICATION No-8

ARUNAGIRINATHAR'S

# KANTHAR - ALANKARAM

with commentary by

M. THIRUVILANGAM,
(Proctor of Colombo)

*Published by:*

THE JAFFNA CO-OPERATIVE TAMIL BOOKS PUBLICATION AND SALES SOCIETY LTD.
*(Regd. No. J-1538 of 10-11-67)*

411/1, K. K. S. ROAD, — JAFFNA.

அச்சுப்பதிவு: கூட்டுறவு அச்சகம், யாழ்ப்பாணம்.

## பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
### வழங்கிய
# உரைச் சிறப்பு

சமயிகளான சாதகர்கள் அருணூல்களுக்குச் செய்யும் உரைகள் தனிச்சிறப்பு வாய்ந்தவைகள். நூல்களின் மந்திர சக்திகளாகிய அலை அதிர்ச்சி, அவ்வுரைகளிலும் தவழ்ந்து கொண்டிருக்கும். அன்றி, உரை, நூலை விழுங்கி விடாமல், நூலின் அருட்பிரவாகத்தை மேன் மேற் பெருக்குவதாயுமிருக்கும்.

திருமுருகாற்றுப்படையிலும் கந்தரலங்காரத்திலும் ஈடுபட்டுப் பாராயணஞ் செய்பவர்கள், திருமுருகாற்றுப் படைக்கு நாவலர் அவர்கள் செய்த உரையிலும், கந்தரலங்காரத்துக்குத் திருவிளங்கம் அவர்கள் செய்த உரையிலும் மேலே குறிப்பிட்ட தனிச் சிறப்புக்களை ஒரு அளவுக்காவது கண்டு அநுபவித்தல் கூடும்.

கந்தரலங்காரத்துக்குத் திருவிளங்கம் அவர்கள் செய்த விசேடஉரைக்குறிப்புக்களைச்சைவசித்தாந்த தத்துவார்த்த அநுபவங்கள் என்றே கூறலாம். சித்தியார் உரையிலும் சிவப்பிரகாச உரையிலும் திருவிளங்கம் அவர்கள் தந்த தத்துவ விளக்கங்களுக்கு, கந்தரலங்கார உரைக் குறிப்புக்கள் அநுபவஇலக்கியம் எனினும் அமையும்.

> ''தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பால்
> ஆரா துமை முலைப் பாலுண்ட பாலன்''

என்ற செய்யுளின் உரைக் குறிப்பில்,

> ''அறுவர் தருமுலைப்பால்—அபரஞானம்.
> தாய்மாரறுவர்—அகச்சமயங்களாறு.
> உமைமுலைப்பால்—பரஞானம்.''

என்று வரும் குறிப்புக்களிலிருந்து, விசேட உரைக் குறிப்புக்களின் போக்குந் தகைமையும் புலமாம்.

திருநெல்வேலி.
7-8-1970

சி-க

S. SOMANATHAN J.P., U.M.
Solicitor, Proctor
and
Notary Public.

Tels: { Office No: 3688
{ Residence No: 91818

115, Hultsdorf Street,
Colombo 12. 10.12.1969

S. Sivagurunathan Esq., M.A.,
The Jaffna Co-operative Tamil Books Publication and
Sale Society Ltd.,
411, Kankesanturai Road,
Jaffna.

Dear Sir,

Copy-right for printing late Mr.M.Thiruvilangam's Books - Ramachandra Estate Agency.

With reference to your letter of 1st March addressed to Mr.T.Ramachandra and the request made to me by Professor A.W.Mailvaganam and Mr.S.Thuraisingham, Proctor, I have discussed the matter of publication of the Books of the late Mr.M.Tiruvilangam at a Meeting yesterday of the Ramachandra Estate Agency with Mr.S.Pathmanathan the Chairman and three of the heirs Messrs.A.Ramachandra, R.Ramachandra and Mr.C. Dharmaratnam.

In view of the fact that "Sivagnana Siddhiyar" and "Sivapragasam", "Kanthar Alangaram" and "Thiruppukal" are out of print and your statement that these Books are appreciated and valued highly by learned Scholars in India and Ceylon, I am instructed to state that they agree to your printing these books without the payment of any royalty.

Yours faithfully,

Copies to:-
(1) The Manager, Ramachandra Estate Agency.
(2) Prof: A.W.Mailvaganam.
(3) S.Thuraisingham, Proctor S.C. Dam Street, Colombo.

# பதிப்புரை

என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யுமாறே—(திருமூலர்)

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான் றலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருக னுமையாள் பயந்த விலஞ்சியமே. (கந்த22)

முத்தமிழால் வைதாரையு மங்கு வாழவைப்போனுகிய முருகனை அலங்காரஞ்செய்யும் இக் கந்தரலங்காரப் பதிப் பாகிய எங்கள் எட்டாம் வெளியீட்டை அவனுடைய திருமென் மலர்ப் பாதங்களில் வைத்து வழிபடுகின்ருேம்.

சொற்சுவை, பொருட்சுவைகளோடு இனிய பத்திச் சுவையும் சந்தச் சுவையும் நிறைந்த இக் கந்தரலங்காரத் துக்குக் கொழும்பு மு. திருவிளங்க தேசிகர் அரியதோர் விளக்கவுரை எழுதி வெளியிட்டிருந்தார்கள். அதன் இரண் டாம் பதிப்பு 1927ம் ஆண்டு வெளிவந்தது. பலவாண்டு கழிந்தமையால் இப்போது அதன் பிரதிகள் கிடைப்பது அரிதாகிவிட்டது.

இந்நூலை மறுபதிப்புச் செய்யவேண்டுமென விரும்பிய எமக்குப் பலவகையில் உதவியவர் பேராசிரியர் ஆ. வி. மயில்வாகனம் அவர்களும், அவருக்குத் தம்பி முறை பூண்ட கொழும்பு வழக்கறிஞர் திரு. சி. துரைசிங்கமவர் களுமாவர். இவ்விருவரும் எடுத்துக் கொண்ட முயற்சிக ளாலேயே இந்நூலின் பதிப்புரிமைச் சொந்தக்காரராகிய இராமச்சந்திரா எஸ்டேட் ஏஜன்ஸி நிறுவனத்தினர் எமக்கு அன்போடு தங்கள் உரிமையை வழங்கினர். திருவிளங்கதேசிகரின் சைவத் திருவும்தமிழ்த்திருவும் விளங் கும் இவ்வரியவுரையை மீண்டும் சைவத்தமிழுலகம் படித் தின்புறுதற்கு ஏற்ற வாய்ப்பினை நல்கிய அந்நிறுவனத் தினருக்கு நாங்களெல்லோருங் பெருங் கடமைப்பட்டுள் ளோம். அவர்களுக்கு எங்கள் நன்றி உரியதாகுக. (அவர் கள் எமக்களித்த உரிமைக் கடிதத்தை பிறிதோரிடத் திற் காண்க)

இந்நூல் வெளிவருவதற்கு வேண்டிய உரிமையைப் பெற்றுத் தருவதில் எடுத்த முயற்சியோடு அமையாது இஃது அழகுற விரைவில் வெளிவரல் வேண்டும் என்று ஆர்வம் கொண்ட பேராசிரியர் ஆ. வி. மயில்வாகனமவர்கள் இவ்வெளியீட்டுக்கு நன்கொடையாக ரூ 50/- வழங்கியது எங்களுக்கு பேருவகை பயப்பதாயிற்று. அவர்கள் எங்களுக்களித்து வரும் ஆக்கமும் ஊக்கமும் சொல்லி முடியா. அவர்களுக்கும், வழக்கறிஞர் திரு. சி. துரைசிங்கமவர்களுக்கும் எங்கள் நன்றிகலந்த வணக்கம் என்றும் உரித்து.

இந்நூல் அச்சாகுங்கால், அச்சுத் தாள்களைப் பார்த்துதவியவர் எங்கள் பெருமதிப்புக்குரிய பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையவர்கள். உடனலம் இடையிடையே குன்றியிருந்தகாலத்திலும், இந்நூல் பிழையற வெளிவரல் வேண்டும் என்ற பேரார்வத்தினால், களைப்படையாது சலியாது காலந்தவறாது அச்சுத்தாள்களைப் பார்த்துத் திருத்தங்கள் பல செய்துதவியதோடு, சிந்தனைக்கு விருந்தாகிய அரிய கருத்துக்கள் அமைந்த ஓர் உரைச் சிறப்பையும் எழுதியுதவிய அன்னாரது தண்ணளியை நாம் என்றும் நினைந்து நன்றி பாராட்டி மகிழ்வோம். அவர்களது ஆர்வமே எங்கள் நூல்கள் துரிதமாக வெளிவரப் பெரிதும் உதவுகின்றது.

சிவதொண்டன் நிலயத்தைச் சேர்ந்த திரு. அ. செல்லத்துரை ஆசிரியரவர்கள், நமது கழகம் மேற்கொள்ளும் இன்றியமையாப் பெரும் பணிகளுக்கெல்லாம் தோன்றாத் துணையாய் முன்னின்று பேருதவிபுரிந்து வருபவர்கள்; இந்நூலின் அச்சுத் தாள்களையும் மிக்க ஆர்வத்துடன் திருத்தியுதவியவர்கள் அவர்களுக்கும் நாம் என்றும் மாறாப் பெருநன்றிக் கடப்பாடுடையேம்.

இந்நூல் அழகுற வெளிவர ஒத்துழைத்த யாழ்ப்பாணம் கூட்டுறவு அச்சக அதிபர், தொழிலாளிகள் முதலியோருக்கும் எங்கள் நன்றி உரித்தாகின்றது.

411/1, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.
7-8-70

சி. சிவகுருநாதன்
தலைவர்
யா கூ. த. நூ. ப. வி. கழகம்

# அருணகிரிநாதர் வரலாறு

அருணகிரிநாதசுவாமிகள் இற்றைக்கு ஏறக்குறைய 450 ஆண்டுகளுக்கு முன்னே திருவண்ணமலையில் திருவவதாரஞ் செய்தார். இளமைப்பருவத்திற் சிற்றின்ப விஷயத்திலே உழன்று, அதனல் வறுமைப்பிணியும், குட்டம் முதலிய நோய்களும் வர நொந்து வாடினர். தமது கூடாவொழுக்கத்தை நினைந்து வருந்தி வாழ்க்கையில் வெறுப்படைந்து, அருணை வடகோபுரத்திலேறிக் கீழே குதித்தார். முன்னைத் தவப்பேற்றினல் முருகன் தரிசனந்தந்து, தமது திருவடிகளை அவர் சிரசின்மேற் சூட்டி ''சும்மா இரு சொல்லற' என்னும் மௌனவுபதேசத்தையும் அருளினர்.

அதுமுதலாக அருணகிரியார் சிவஞானச் செல்வராயினர். தேனூறு தமிழுக்கு வாயூறுஞ் சிவகுமரன் ''முத்தைத் தரு'' என்ற முதலடி எடுத்துதவினன். அன்றுமுதல் பாடிய பாக்களின் தொகுப்பே திருப்புகழ் எனப் பெயர் பெற்றது.

தமிழ் நாட்டிலும் ஈழநாட்டிலுமுள்ள திருவண்ணமலை, பழனி, திருச்செந்தூர், திருத்தணிகை, கதிர்காமம் முதலாய பல தலங்களைத்தரிசித்துத் திருப்புகழ் பாடித் திருவண்ணமலைக்கு மீண்டனர்.

அருணையில், வில்லிபுத்தூரார் 'திதத் தித்த' என்ற கந்தரந்தாதிப் பாட்டுக்குப் பொருள் கூறத் தெரியாது திகைத்துத் தோல்வியடையவும், அவருக்குத் தண்டனை விதியாது, அவரைத் திருத்தினர்.

சம்பந்தாண்டாரென்பவரோடும் வாதம் செய்து, ''அதல சேதனராட'' என்ற பாடலைப்பாடி, முருகவேளை மயிலின்மேல் வரவழைத்து, வெற்றியடைந்தார். சுவாமிகள் கிளியுருவில் பொன்னுலகஞ் சென்று கற்பகமலர் கொண்டுவந்தார். அக்கிளியுருவிலேயே ஆறுமுகன் திருத்தோளில் அமர்ந்து, கந்தரநுபூதி இயற்றி, பின் அவனடியில் கலந்து முத்தி பெற்றர்.

அவரியற்றிய வேறு நூல்கள் கந்தரலங்காரம், திருவகுப்பு, உடற்கூற்று வண்ணம் என்பன.



ஒரு கோடி முத்தந் தெள்ளிக் கொழிக்குங் கடற் செந்தில்.

—கந்தரலங்காரம் பக். 109

உ

சிவமயம்

# கந்தரலங்காரம்

குருதரிசனம்.

அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு வார்தலையில்
தடப டெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

(இதன் பொருள்). வருவார் - வணங்கும்படி வருவோர், தலையில் - தங்கள் தலைகளிலே, தடபட எனப்படு குட்டுடன் - தடபட என்னும் ஒலி பொருந்திய குட்டுக்களோடு, சர்க்கரை - தமக்கு நிவேதிக்கும் சர்க்கரையையும், மொக்கிய -உவந்துகொண்டருளிய, கைக் கடதட கும்பக் களிற்றுக்கு - துதிக்கையையும் மதம்பொருந்திய பெரிய மத்தகத்தினையுமுடைய யானைமுகம்போலும் முகத்தையுடைய விநாயகக்கடவுளுக்கு, இளைய களிற்றினை - இளைய யானைபோலும் சுப்பிரமணியக்கடவுளை, அடல் அருணைத்திருக் கோபுரத்து - வெற்றிபொருந்திய திருவண்ணமலைத் திருக்கோபுரத்தின்கணுள்ள, அந்த வாயிலுக்கு வட அருகில் சென்று — அக்கோபுரவாயிலுக்கு வடக்குப் பக்கத்திற் போய், கண்டு கொண்டேன் - யான் தரிசித்துக்கொண்டேன்.

குறிப்பு. 1. அருணை: அருணசலம், அருணை என மரீயிற்று. அருணம் - சிவப்பு. அசலம் - மலை. ஏ - அசை.

2. சர்க்கரை மொக்கிய:—சர்க்கரை ஆன்மபோதத்தைக் குறிக்கும் என்பர். மொக்குதல் — உவந்தேற்றல்.

3. கை:—பஞ்சக்கிருத்தியங்களையும் குறிப்பனவாகிய விநாயகக்கடவுளது ஐந்து கரங்களுள், துதிக்கை அநுக்கிரகத்தைக் குறிக்கும் என்பர்.

4. கடதட கும்பம்; கடம் — மதம். தடம் - பெருமை. கும்பம் - மத்தகம். மதம் — இச்சாஞானக்கிரியைகள், சச்சிதானந்தம் எனினுமாம்.

5. களிறு:—யானைமுகம் — பிரணவ சொரூபம்.

6. இளைய களிறு - யானைபோலும் வலிமையுடைய சுப்பிரமணியக் கடவுள்.

7. தலையிற்படு குட்டுடன் சர்க்கரை மொக்கிய கைக்களிறு, கடதட கும்பக் களிறு எனத் தனித்தனி இயையும்.

8. விநாயகக்கடவுள் தம்மை வணங்க வருவோர் தங்கள் தலையில் குட்டுங் குட்டுகளையும் சர்க்கரை கலந்து சமைத்து நிவேதித்த மோதகத்தையும் உவந்து ஏற்றருளுபவராதலின், ''குட்டுடன் சர்க்கரை மொக்கிய களிறு'' எனப்பட்டனர்.

**தாற்பரியம்.** முருகக்கடவுள் குருவாக எழுந்தருளித் தரிசனங் கொடுத்த முறைமை கூறியது.

—

## நூல்.

### 1. பிரபஞ்சப்பற்றொழிதல்.

**பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைப்ர பஞ்சமென்னுஞ்**
**சேற்றைக் கழிய வழிவிட்ட வாசெஞ் சடாடவிமேல்**
**ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்**
**கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே.**

(இ—ள்.) செம் சடா அடவி மேல் - சிவந்த சடையாகிய காட்டின்மேல், ஆற்றை பணியை இதழியை தும்பையை அம்புலியின் கீற்றை - கங்கையையும் பாம்பையும் கொன்றைமாலையையும் தும்பைமாலையையும் சந்திரகலையையும், புனைந்த - அணிந்த, பெருமான் - சிவபெருமா

னுடைய, குமாரன் - குமாரரும், கிருபாகரன் - கருணைக் கிடமானவருமாகிய முருகக்கடவுள், பேற்றைத் தவம் சற்றும் இல்லாத என்னை - பேற்றை அடைதற்குக் கருவியாகிய தவம் சிறிதுமில்லாத அடியேனை, ப்ரபஞ்சமென்னும் சேற்றைக் கழிய - பிரபஞ்சம் என்னும் சேற்றினின்று நீங்கும்படி, வழிவிட்டவா (என்) - அருள்வழியில் விட்ட முறைமை என்ன வியப்புடைத்து.

குறிப்பு: 1. பேற்றைத் தவம் - பேறு அடைதற்கு ஏதுவாகிய தவம். பேறு - பயன், சிவப்பேறு, முத்தி. தவம் - சரியை கிரியா யோகங்களாகிய சிவபுண்ணியங்கள்.

2. பிரபஞ்சம் - மாயாகாரியமான தனு கரண புவன போகங்கள்.

3. வழி – பிரபஞ்சப்பற்றை ஒழித்து முத்தியடைதற்கேற்ற நெறியாகிய அருள்வழி. அருள்வழிநின்ருலன்றிப் பிரபஞ்சப்பற்று நீங்காது.

4. விட்டவா - விட்ட ஆறு என்பது விட்டவா எனக் குறைந்து நின்றது. விட்டவாறு ''என்ன வியம்பு'' என வருவித்துப் பொருளுரைக்க. விட்டவாறு - எழுவாய். என் - பயனிலை எஞ்சிநின்றது.

5. செஞ்சடாடவிமேல் .....பெருமான்:— பஞ்சகிருத்தியஞ் செய்து ஆன்மாக்களின் மல மாயை கன்மங்களை ஒழித்துத் திருவருள்பாலித்துப் பேரின்பத்தைக் கொடுத்தருளும் சிவபெருமான் என்பது.

செஞ்சடாடவிமேல் - அருள்வியாபகத்துள்ளாக பஞ்சகிருத்தியம் முதலியனவெல்லாம் அந்த அருள்வியாபகத்துக்குள் அடங்கி நடைபெறுதலால் ''செஞ்சடாடவிமேல்' என்ருர். செஞ்சடை - அருளைக்குறிப்பது.

கங்கை -அகங்காரம் முதலிய தத்துவங்களை அடக்குஞ் சக்தியுடையவர் என்பதைக் குறிப்பது. பணி - சுத்தமாயை

யைக் குறிப்பது. இச் சுத்த மாயையினின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவித்துப் பஞ்சகிருத்தியமும் நடைபெறச் செய்பவர் என்பது. இதழி, அம்புலியின் கீறு - திருவருளைக் குறிப்பன. கீறு – பிளவு, பாகம், பங்கு.

6. குமாரன் - சிவபெருமானுடைய ஞானசத்தி.

7. கிருபாகரன் – கிருபைக்கு உறைவிடமாயுள்ளவர். ஆகரம் - உறைவிடம்.

(தா—ம்.) கருணாகரராகிய முருகக்கடவுள் முத்தி பெறுதற்குரிய புண்ணியஞ் சிறிதுமில்லாத அடியேனைப் பிரபஞ்சப் பற்றினின்றும் நீக்கி முத்திநெறியில் விட்டது என்ன வியப்பாயிருக்கின்றது? அதற்குக்காரணம் அவரது கருணையேயாம்.

2. முத்திக்குபாயம்.

அழித்துப் பிறக்கவொட் டாவயில் வேலன் கவியையன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீரெரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடுங்கயிற்றாற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றோகவி கற்கின்றதே.

(இ—ள்.) அழித்து - (பிறவிக்குக் காரணமான மல கன்மங்களை) ஒழித்து, பிறக்க ஒட்டா-இனிப்பிறக்கவிடாத, அயில் வேலன் கவியை - கூர்மை பொருந்திய வேற்படையையுடையவராகிய முருகக் கடவுள்மீது பாடிய பாடல்களை, அன்பால் - அன்போடு, எழுத்துப் பிழை அறக் கற்கின்றிலீர் – (அவற்றின் பொருளை அறிந்து) இலக்கண வழுவில்லாமற் படிக்கின்றீர்களில்லை, எரி மூண்டது என்ன- நெருப்பு மூண்டெரிகின்றதென்னும்படி, விழித்து - கோபித்துப் பார்த்து, புகை எழ – அதனிடத்துப் புகையுண்டாக, பொங்கு - கோபித்து எழுகின்ற, வெம் கூற்றன் விடும் கயிற்றால் - கொடிய இயமன் வீசுகின்ற பாசக்கயிற்றினால், கழுத்தில் சுருக்கு இட்டு – கழுத்திலே சுருக்குப்

போட்டு, இழுக்கும் அன்றே - இழுக்கின்ற அந்நாளிற்றுனே, கவி கற்கின்றது - அப்பாடல்களை நீங்கள் படிக்கப் புகுவது.

குறிப்பு: 1. கழுத்திற் சுருக்கிட்டு...:— விடயபோகங்களில் அழுந்திச் சிவத்தியானம் சிறிதுமின்றித் தமது வாழ்நாளை வீணுகக் கழிப்பவர் அந்திய காலத்தில் இயமவாதனைக்குள் அகப்பட்டு மயங்குவர். அங்ஙனமின்றி முருகக் கடவுளது கவிகளின் கருத்தை அறிந்து படிப்பவர்களுக்கு இயமவாதனையன்றிப் பிறப்பும் நீங்கும் என்பது.

2. எழுத்து - இலக்கணம். ''எழுத்தறியார் கல்வி' என நன்னெறியில் இப்பொருளில் வருதல் காண்க.

(தா—ம்.) முருகக் கடவுள்மீது பாடிய பாடல்களை அன்போடு படிப்பவர்களுக்கு இயமவாதனையும், பிறப்புமில்லையாம்.

3. வேற்படையின் ஆற்றல்

**தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்**
**கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்**
**நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்ததுசூர்**
**பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.**

(இ—ள்.) தேர் அணி இட்டுப் புரம் எரித்தான் மகன் - (பூமியாய) தேரை அலங்கரித்து முப்புரங்களையுந் தகனஞ் செய்தவராகிய சிவபெருமானது குமாரராகிய முருகக்கடவுள், செம் கையில் வேல் கூர் அண்ணி இட்டு - தமது சிவந்த திருக்கரத்திலுள்ள வேற்படையின் கூர்பட்டதனுல், கிரௌஞ்சம் அணுவாகிக் குலைந்து - கிரௌஞ்சமலையானது பொடியாகி அழிய, நேர் அணி இட்டு வளைந்த அரக்கர் கடகம் நெளிந்தது - வரிசையாக அணிவகுத்துச் சூழ்ந்து நின்ற அசுரருடைய சேனை தோல்வியடைந்தது, சூர் பேர் அணி கெட்டது - சூரனுடைய பெரிய பெருமையுங் கெட்டது, தேவேந்திரலோகம் பிழைத்தது - தேவேந்திரனது உலகமாகிய சுவர்க்கமும் உயர்ந்தது.

குறிப்பு. *1.* தேரணியிட்டுப் புரமெரித்தான்:— தாரகாசுரன் புத்திரராகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூன்று அசுரர்களும் சிவபெருமானை நோக்கி மிகுந்த தவஞ்செய்து, சுவர்க்க மத்திய பாதாளமாகிய மூன்றுலகங்களிலும் அந்தரத்திற் சஞ்சரிக்கும் இரும்பு வெள்ளி பொன் என்பவற்றுற் செய்யப்பட்ட மூன்று பட்டணங்களையும் முறையே பெற்று, அப்பட்டணங்களோடு தாம் நினைந்த இடங்களிற் சென்று அங்குள்ளவரைக் கொன்றுதிரியாநிற்குங் காலத்தில், அவர்களுடைய கொடுமைக்கஞ்சி முறையிட்ட தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளுக்குச் சிவபெருமான் இரங்கிச்சந்திர சூரியர்கள் சில்லுகளாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும் அமைந்த பூமியாகிய இரதத்தின்மேலேறி, மேருவை வில்லாக வளைத்துக்கொண்டு அதற்கு ஆதிசேடனை நாணுக்கி அமைத்து வாயுவைச் சிறகாகவும் திருமாலை அம்பாகவுங்கொண்டு எய்ய முயலுகையில், சந்திரன் முதலிய தேவர்கள் தத்தம் ஆற்றலாலே திரிபுரங்களை அழித்தலாகிய இக்காரியம் முற்றுப் பெறுகின்றதென்று இறுமாப்புக்கொண்டதைச் சிவபெருமான் உணர்ந்து புன்னகைபுரிய, அந்நகையால் முப்புரங்கள் எரிந்து சாம்பிராயின என்று புராணங் கூறும்.

தனு கரண புவன போகங்களாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து அவரவர் கன்மங்களை நுகர்வித்துப் பக்குவ காலத்தில் மும்மலங்களையும் ஒழித்து ஞானத்தைக் கொடுத்தருளுவர் சிவபெருமான் என்பது இதன் பொருள். தேர் - மாயை. தேரணி - மாயையின் காரியமான தனு கரண புவன போகங்கள். தேர் அணி இட்டு – மாயா காரியங்களை வகுத்து. முப்புரம் - மும்மலகாரியமான தூல சூக்கும காரண சரீரங்கள். அண்ணியிட்டு என்பது அணியிட்டு என விகாரமாயிற்று.

2. கிரௌஞ்சம் அணுவாகிக் குலைந்து - கிரௌஞ்சன் என்னும் ஓர் அசுரன் தன்மாயையினுல் மலைவடிவாகி

அநேக தேவர்களையும் முனிவர்களையும் வருத்தினன். முருகக்கடவுள் தமது வேலாயுதத்தால் தாரகனைக் கொன்றபோது இவனையுங் கூறுசெய்தார் என்று புராணங் கூறும்.

முருகக்கடவுள் தமது வேற்படையாகிய ஞானசத்தியால் மலமாயை கன்மங்கள் மூன்றையும் நீக்கினர் என்பது. சூர் - ஆணவமலம். கிரௌஞ்சம் - மாயை. அரக்கர் கடகம் - கன்மங்கள். இதனுல் முப்புரங்களை எரித்த சிவபெருமானும் மும்மலங்களை நீக்கும் முருகக்கடவுளும் தம்முட்பேதமில்லாத ஒரே பரம்பொருள் என்பது அறிதற்பாலது.

3. தேவேந்திரலோகம் - மும்மலங்களினீங்கிய ஆன்மாக்கள்.

(தா—ம.) முருகக்கடவுளின் ஞானசத்தியாகிய வேற்படையானது மும்மலங்களை ஒழிக்கும் ஆற்றலையுடையது என்பதாம்.

### 4. அருள்வேண்டல்.

**ஓரவொட் டாரொன்றை யுன்னவொட் டார்மல ரிட்டுனதாள்**
**சேரவொட் டாரைவர் செய்வதென் யான்சென்று தேவருய்யச்**
**சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்**
**கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே.**

(இ—ள்.) தேவர் உய்யச் சென்று—தேவர்கள் பிழைக்கும்படி சென்று, சோர நிட்டூரனைச் சூரனை-வஞ்சனையுடைய கொடியனுகிய சூரனை, கார் உடல் சோரி கக்க — கரிய உடம்பு இரத்தங்கக்கும்படி, கூர கட்டாரி இட்டு - கூர்மையையுடைய வேற்படையைச் செலுத்தி, ஓர் இமைப்போதினில் கொன்றவனே - ஓர் இமைப்பொழுதில் அழித்த கடவுளே, ஐவர் - பொறிகளாகிய ஐவர், ஒன்றை உன்ன ஒட்டார் ஒர ஒட்டார் - உம்முடைய துதிகளில் ஒன்றையாவது நினைக்கவும் விடார் ஆராயவும் விடார், மலர் இட்டு உன

தாள் சேர ஒட்டார்-மலர்களைத் தூவி உமது திருவடிகளைத் தியானிக்கவும் விடார், யான் செய்வது என் - யான் செய்யக்கடவது யாது?

குறிப்பு. 1. சேர்தல் - இடைவிடாது நினைத்தல்.

2. ஐவர் - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஞானேந்திரியங்கள். ஐவர் எனவே இவற்றைச் செலுத்தி நிற்கும் அந்தக்கரணம் முதலியவையுங் கொள்ளப்படும்.

3. யான் செய்வதென் - கருவிகளை உமது திருவருளாலன்றி எனது போதத்தினுல் அடக்க இயலாது என்பது.

4. வேற்படையாகிய ஞானசக்தியினுற் சூரனுகிய ஆணவமலத்தை அழித்த உமக்கு எனது ஐம்பொறிகளை அடக்கி, உமது திருவடிகளை நினைக்கச்செய்தல் அரிதன்றென்பார் ''சோரநிட்டூரனைச் சூரனை...... கொன்றவனே'' என்ருர். கட்டாரி - குற்றுவாள், இங்கே வேலை உணர்த்திற்று.

5. ஒரிமைப் போதினிற் கொல்லல் - திருநோக்கத்தால் மலத்தை நீக்கல்.

(தா—ம்.) தேவரீரை நினைக்கவொட்டாது விடயங்களிற் செலுத்தும் பஞ்சப் பொறிகளையும் உமது திருவருளினுலன்றி என்னுல் அடக்க முடியாது.

5. முருகக்கடவுளது பரத்துவம்.

திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருநதிச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
குருத்தைக் குறிஞ்சிக் கிழவனென் ருேதுங் குவலயமே.

(இ—ள்) திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற் பாவை திருமுலைப்பால் அருந்தி - ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு உலகங்களைத் தோற்றுவித்தருளிய அழகிய பாவைபோன்ற உமாதேவியாரது திருமுலைப்பாலை உண்டு, சரவணப் பூந்

தொட்டில் ஏறி-சரவணவாவியாகிய பூந்தொட்டிலில் ஏறி, அறுவர் கொங்கை விரும்பி- கார்த்திகைப்பெண்கள் அறுவருடைய முலேப்பாலே விரும்பி, கடல் அழ குன்று அழ சூர் அழ விம்மி அழும் குருந்தை - கடலும் கிரௌஞ்ச மலேயும் சூரபன்மனும் வருந்தும்படி விம்மியழுத குழந்தையாகிய முருகக் கடவுளே, குவலயம் குறிஞ்சிக் கிழவன் என்று ஓதும்- இப்பூமியிலுள்ளோர் குறிஞ்சிநிலத்தலேவர் என்று சொல்வர்.

குறிப்பு. 1. திருந்தப் புவனங்களீன்ற:— ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுவது ஆன்மாக்களோடு சகசமாயிருக்கும் ஆணவமலம் பரிபாகமாகி அவ்வான்மாக்கள் முத்திப்பேற்றை அடைந்து உய்யும்பொருட்டாதலின் "திருந்த" என்றும், அவ்வுலகங்களேத் தோற்றுவிப்பது சிவசத்தியாதலால் "புவனங்களீன்றபொற்பாவை" என்றும் கூறினர்.

2. பொற்பாவை 'திருமுலேப்பாலருந்தி' என்றதனுல் முருகக்கடவுள் பராசக்தியின் சொரூபமாகிய ஞானசொரூபி என்பது விளக்கப்பட்டது. திருமுலேப்பால் - பரஞானம்.

3. சரவணப் பூந்தொட்டிலேறி - சுத்தமாயையைக் காரியப்படுத்தி. சரவணப் பூந்தொட்டில் சுத்தமாயையைக் குறிப்பது.

4. அறுவர் கொங்கை விரும்பி - அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்நின்று அவர்கள் பக்குவமடையும் பொருட்டுக் கருணே கூர்ந்து. கொங்கை - பக்குவம்.

5. கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும் - ஆன்மாக்கள் மல மாயை கன்மங்களாற் பந்திக்கப்பட்டு வருந்துவதை நோக்கிக் கருணே கூர்தல். கடல் - கன்மம். குன்று-மாயை. சூர் - ஆணவமலம்.

6. குருந்து - என்றும் ஒரு பெற்றியனுயுள்ள குமரன், சுத்த ஞானம்.

7. கிழவன் — உரியோன், தலைவன்.

**(தா—ம்.)** சர்வான்மாக்களுக்கும் மல மாயை கன்மங்களை ஒழித்து ஞானத்தைக் கொடுக்கும் சுத்தமாயாதீதராகிய முருகக்கடவுளைக் குறிஞ்சி நிலத்தலைவர் என்று மாத்திரங் கூறுதல் பொருந்தாது என்பது குறித்துக்காட்டி அவரது பெருமைகூறப்பட்டது.

6. முருகக்கடவுளை வழிபடுதலினுல் வரும் பேறு.

**பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்**
**விரும்புங் குமரனை மெய்யன்பி னுன்மெல்ல மெல்லவுள்ள [கை**
**அரும்புந் தனிப்பர மாநந்தந் தித்தித் தறிந்தவன்றே**
**கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.**

**(இ—ள்.)** பெரும் பைம் புனத்தினுள் - பெரிய பசுமையான புனத்தின்கண், சிற்றேனல் காக்கின்ற - முதிராத தினைப்பயிரைக் காவல் செய்யும், பேதை கொங்கை - பேதைப்பருவத்தையுடைய வள்ளிநாயகியாரது தனங்களை, விரும்பும் குமரனை - விரும்புகின்ற குமரக்கடவுளை, மெய் அன்பினுல் மெல்லமெல்ல உள்ள — மெய்யன்போடு மெல்ல மெல்ல நினைக்க, அரும்பும் - அங்கு தோன்றுகின்ற, தனிப் பரமாநந்தம் தித்தித்து — ஒப்பற்ற சிவாநந்தம் இனித்ததை, அறிந்த அன்றே-அனுபவித்த அப்பொழுதே, கரும்பும் துவர்த்து - இனிமையுள்ள கருப்பஞ்சாறும் துவர்த்து, செந்தேனும் புளித்து - சிவந்த தேனும் புளித்து, அறக்கைத்தது - மிகக் கைத்தது.

குறிப்பு. 1. பெரும் பைம் புனத்தினுட்... .. விரும்புங் குமரனை:- இவ்வுலகத்திலே நிலையில்லாத சத்தாகிய விடயங்களைப்பற்றி அவற்றில் அழுந்தும் உயிர்கள் அப்பற்றினீங்கி ஞானம் அடையும்படி விரும்புங் குமரக் கடவுளை.

புனம் - உலகம், பிரபஞ்சம், சிறு ஏனல் - நிலையற்ற மண் பொன் பெண் முதலியன. பேதை-பக்குவமடையாத உயிர். கொங்கை - பக்குவம்.

2. மெய்யன்பினல் மெல்ல மெல்ல வுள்ள ..... கைத் தது:- முருகக்கடவுளைப் பத்தியோடு தியானித்துவரின் திருவருள் தோன்றிச் சிவாநந்தம் உண்டாகும். இதனை அனுபவிக்கவே முன் சொல்லிய பிரபஞ்சப்பற்றும் அதனல் வரும் விடயாநந்தமும் முற்றும் நீங்கும் என்பது. கரும்பு, செந்தேன் - விடயாநந்தம்.

(தா—ம்.) முருகக்கடவுளைப் பத்தியோடு தியானித்து வரின் பிரபஞ்ச வெறுப்பும் பேரின்பமும் உண்டாகும்.

7. பிரபஞ்சப் பற்றற வேண்டல்.

**சளத்திற் பிணிபட்ட சட்டுக்ரி யைக்குட் டவிக்குமென்றன்**
**உளத்திற்ப்ர மத்தைத் தவிர்ப்பா யவுண ருரத்துதிரக்**
**குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்**
**களத்திற் செருக்கிக் கழுதாட வேடுெட்ட காவலனே.**

(இ—ள்.) வெற்றிக் களத்தில் - வெற்றியை அடைந்த போர்க்களத்திலே, அவுணர் உரத்து உதிரக் குளத்தில் - அசுரருடைய மார்புகளினின்று சொரிந்த இரத்தக்குளத் திலே, கழுது - பேய்கள், குதித்து குளித்து -பாய்ந்துமூழ்கி, களித்து குடித்து - மகிழ்ந்து பருகி, செருக்கி ஆட - மயங்கி ஆடும்படி, வேல்தொட்ட காவலனே- அவ்வசுரர்மீது வேற் படையைச் செலுத்திய நாயகரே, சளத்தில் பிணிபட்டு - உடம்பிலே நோய் பொருந்தி, அசட்டுக் கிரியைக்குள் தவிக்கும் - குற்றமான செயலுள் அகப்பட்டுத் தவிக்கின்ற, என்றன் உளத்தில் பிரமத்தை தவிர்ப்பாய் - எனது மனத்தி லுள்ள மயக்கத்தைத் தீர்த்தருளுவீராக.

குறிப்பு. 1. சடம் என்பது சளம் என நின்றது. சூடா மணி என்பது சூளாமணி என நின்றதுபோல. அசடு - குற் றம்.

2. அவுணர் உரம் — உயிர்களைப் பொருந்திய ஆணவ மலம்.

3. வெற்றிக்களம் - அருளின் தரிசனம், குருதரிசனம்.

(தா—ம்.) ஞானசத்தியால் மலத்தைப் போக்கியருளும் நாயகரே, விடயபோகங்களில் அழுந்தும் எனது மாயா மயக்கத்தை நீக்கியருள்வீராக.

8. சிவாநந்தப் பேறு.

**ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்**
**அளியில் விளைந்ததொ ராநந்தத் தேனை அநாதியிலே**
**வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்**
**தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே.**

(இ—ள்.) ஒளியில் விளைந்த - பரஞ்சோதியாகிய சிவத்திலேயுண்டாகிய, உயர் ஞான பூதரத்து உச்சியின் மேல் - சுத்த ஞானமாகிய மலையின் உச்சியின் மேலதாய், அளியில் விளைந்து - அச்சிவத்துக்கு அன்புசெய்தலால் உண்டாகிய, ஓர் ஆநந்தத்தேனை - ஒப்பற்ற சிவாநந்தம் என்னும் தேனை, அநாதியிலே வெளியில் விளைந்த - அநாதியிலே பரவெளியாகிய சிவத்தில் உண்டாகிய, வெறும் பாழைப் பெற்ற - வெறுமையாகிய முப்பாழையும் பாழ் எனக் காணப்பெற்ற, வெறும் தனியை - சுத்த தனிநிலையாகிய முத்தி நிலையை, முகம் ஆறு உடைத் தேசிகன் — ஆறு திருமுகங்களையுடைய எனது குருநாதன், தெளிய விளம்பியவா-அடியேன் தெளி, வாய் அறியும்படி சொல்லிய முறைமை என்ன வியப்பாயிருக்கின்றது.

குறிப்பு: 1. உயர் ஞான பூதரத்துச்சியின் மேல் உள்ள ஆநந்தத்தேன், அளியில் விளைந்த ஆநந்தத்தேன் எனவும், அநாதியிலே வெளியில் விளைந்த வெறுந் தனி, வெறும் பாழைப் பெற்ற வெறுந் தனி எனவும் இயையும்.

2. உயர் ஞான பூதரத்துச்சியின் மேலளியில் விளைந்த தோராநந்தத்தேன்: — பராசத்தி கழன்ற துரியாதீத

நிலையில் ஆநந்தப் பேறுண்டாதலால், ''உயர் ஞான பூதரத்துச்சியின் மேல் ஓராநந்தம்'' என்றார். உயர் ஞானம் - சுத்த ஞானமாகிய பராசக்தி. சிவத்திலே அத்துவிதமாய்க் கலந்துநின்று அன்புசெய்தலினால் அப்பேராநந்தம் உண்டாதலின், ''அளியில் விளைந்த'' என்றார்.

3. வெறும் பாழைப் பெற்ற வெறுந்தனி:—மாயைப் பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் என்னும் முப்பாழும் தோன்றாத சுத்தத் தனிநிலையாகிய முத்தி நிலை. இக்கருத்துப்பற்றியே இவ்வாசிரியர் ''மூளும் வினை சேர'' என்னும் தொடக்கத்துத் திருப்புகழ்க் கவியில் ''ஆநந்தமேலை வெளியேறி, நீயின்றி, நானின்றி, நாடியினும் வேறுதானின்றி'' என்றார். ''எனதென்பதும் போய் யானென்பதும் போய், எல்லா மிறந்த விடங்காட்டும் நினதென்பதும் போய் நீயெனல் போய் நிற்கு நிலைக்கே நேசித்தேன்'' என்பதும் இப்பொருள் பற்றியது. (தாயுமா.)

(தா—ம்.) ஆறுமுகதேசிகர் ஞானநிட்டையை எனக்கு அருளிய முறைமை என்ன வியப்பாயிருக்கின்றது?

9. இதுவுமது

தேனென்று பாகென் றுவமிக்கொ ணாமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே.

(இ—ள்.) தேன் என்று பாகு என்று உவமிக்க ஒணா மொழி - தேன் என்றும் பாகு என்றும் உவமித்துச் சொல்லமுடியாத இனிய சொல்லையுடைய, தெய்வ வள்ளி கோன் - தெய்வத்தன்மையுடைய வள்ளிநாயகியாரது தலைவராகிய முருகக்கடவுள், அன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு - அந்நாளில் எனக்கு உபதேசித்த பொருள் ஒன்று உள்ளது, அது கூறவற்றோ - அஃது இன்னதென்று சொல்லற்கு வலியமைந்ததோ, வான் அன்று

– ஆகாயமுமன்று, கால் அன்று - வாயுவுமன்று, தீ அன்று - தேயுவுமன்று, நீர் அன்று - அப்புவுமன்று, மண்ணும் அன்று - பிருதிவியுமன்று, தான் அன்று - தாமுமன்று, நான் அன்று - ஆன்மாவாகிய நானுமல்லன், அசரீரி அன்று - அருவப்பொருளுமன்று, சரீரி அன்று - உருவப் பொருளுமன்று.

குறிப்பு. 1. வள்ளிநாயகியார் பேரானந்தத்தைப் பெற்றவராதலின், ''தேனென்று பாகென் றுவமிக்கொ ணுமொழித் தெய்வவள்ளி'' என்றார்.

2. வள்ளி கோன் - வள்ளிநாயகியாருக்கு முத்தியின் பம் அருளிய குருநாதன்.

3. ஒன்று - பேரின்பநிலை, சுகாதீதம்.

4. வற்றே - வல் + று = வற்று. ஓ - எதிர்மறையிடைச் சொல். வல் - வன்மை.

5. தானன்று நானன்று - சிவப்பாழும் சீவப்பாழும் ஒழிந்த நிலை. (பார் - செ. 8. கு. 3.)

6. அசரீரி அன்று - ஆநந்தம் நித்தமாய் எங்கும் பரிபூரணமாயிருத்தலின் அசரீரியன்று என்றார்.

7. வாக்கு மனாதீதமாகலின், சரீரியன்று என்றார்.

(தா—ம்.) முருகக்கடவுள் எனக்குபதேசித் தருளிய பேரின்பநிலை இத்தன்மையதென்று எனது நாவினாற் சொல்லமுடியாது.

### 10. துரியநிலை.

**சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்து சும்மாவிருக்கும்**
**எல்லையுட் செல்ல வெனைவிட்ட வாவிகல் வேலனல்ல[செவ்வாய்**
**கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக்கொவ்வைச்**
**வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல்லபமே.**

(இ—ள்.) நல்ல கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லி யைக் கல்வரைக் கொவ்வைச் செவ்வாய் வல்லியைப் புல்

கின்ற மால்வரைத் தோள் அண்ணல் - நல்ல கொல்லிப் பண்ணைப்போலப் பேசுஞ் சொல்லையுடையவரும் கன்மலை கள் பொருந்திய குறிஞ்சிநிலத்திற் பிறந்த கொவ்வைக் கனிபோலும் சிவந்த வாயையுடையவருமாகிய வள்ளி நாயகியாரைத் தழுவுகின்ற பெரியமலைபோலும் தோள் களையுடைய தலைவரும், இகல் வேலன் - வலிபொருந்திய வேற்படையையுடைவரும் ஆகிய முருகக்கடவுளது, வல் லபம் - ஞானசக்தியானது. சொல்லுகைக்கு இல்லை என்று - சொல்லுதற்கு இனி ஒருபொருளும் இல்லை என, எல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லையுள் செல்ல - மனம் வாக் குக் காயங்களின் செயல்களெல்லாம் நீங்கப்பெற்று மௌ னமாயிருக்கும் இடமாகிய அருணிலைக்கண் சென்று நிலை பெற்றிருக்க, எனை விட்டவா - என்னை விட்டமுறைமை என்ன வியப்பாயிருக்கின்றது?

குறிப்பு. 1. சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்து சும்மாவிருக்கும் எல்லை:—முப்பத்தாறு தத்துவங் களும், தற்போதமும் நீங்கித் தனக்கெனச் செயலின்றி அருளே தாரகமாய் அவ்வருளேயாய் நிற்கும் துரியநிலை. ''சித்த மவுனஞ் செயல் வாக் கெலாமவுனஞ், சுத்த மவுனமென்பாற் றேன்றிற் பராபரமே.'' (தாயு.)

2. சேர்த்தல் - ஓத்தல், இசைத்தல், சொல்லுதல்.

3. வல்லபம் - வல்லமை, ஞானசக்தி.

4. வல்லி - கொடி, பெண்; கொடிபோலும் வள்ளி நாயகியார் எனினுமாம்.

(தா—ம்.) பிரபஞ்சத்திலுழன்றுதிரிந்த அடியேனை, முரு கக்கடவுளது ஞானசத்தி அருணிலையிற் செலுத்தியது என்ன வியப்பாயிருக்கின்றது?

11. முருகக்கடவுளின் திரோதானசத்தி.

குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு வடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட வத்தூளின் வாரி திடர்ப்பட்டதே.

(இ—ள்.) அவுணர் குடர் குழம்ப - அசுரருடைய குடல் கலங்கும்படி, குசை நெகிழா கசை இடு வாசி விசை கொண்ட - கடிவாளத்தை இளக்கிச் சம்மட்டியால் அடித் துத் தூண்டிய குதிரையினது வேகம்போன்ற வேகத்தோடு செல்லுகின்ற, வெற்றிவேலோன் - வெற்றிபொருந்திய வேற்படையையுடைய முருகக்கடவுளது, வாகனப் பீலி யின் கொத்து அசைபடு கால்பட்டு, மயில்வாகனத்தினது தோகைக்கூட்டம் அசைதலாலுண்டாகிய காற்றுப்பட்டு, மேரு அசைந்து - மேருமலை அசைந்தது, அடி இட - அம் மயிலானது அடிபெயர்த்துவைக்க, எண் திசை வரை தூள்பட்ட - எட்டுத்திசைகளிலுமுள்ள பர்வதங்கள் துகள் பட்டன, அத்தூளின் — அத்துகள்களினால், வாரி திடர் பட்டது - சமுத்திரம் மேடாயிற்று.

குறிப்பு. 1. வெற்றிவேலோன் வாகனம் எனவும், அவுணர் குடர் குழம்ப விசைகொண்ட வாகனம் எனவும் இயையும்.

2. குசைநெகிழா கசையிடு வாசி என்க.

3. வெற்றிவேலோன் வாகனம் - மயில். அது திரோ தானசத்தி.

4. அவுணர் குடர் குழம்ப விசைகொண்ட வாக னம் - ஆன்மாக்களைப் பொருந்திய ஆணவமலம் பரிபாக மாகும்பொருட்டு அவரவர் கன்மங்களை நுகர்விக்கும் திரோதானசத்தி.

5. பீலியின் கொத்தசைபடு கால்பட்டசைந்தது மேரு: - சுத்தமாயாதத்துவங்கள் வியாபரித்தலால் அச் சுத்தமாயை காரியப்படத்தொடங்கிற்று என்பது. பீலி யின் கொத்து - சுத்தமாயாதத்துவங்கள் ஐந்து. மயிற் பீலியின் ஐந்து வர்ணங்களும் ஐந்து சுத்ததத்துவங்களை யும் குறிப்பன. மேரு - சுத்தமாயை.

6. அடியிட எண்டிசைவரை தூள்பட்டவத்தூளின் வாரிதிடர்ப்பட்டது: - சுத்ததத்துவங்கள் அசுத்ததத்துவங் களைச் செலுத்துதலினால் ஆன்மாக்கள் அவரவர் கன்மத்

தைப் புசித்து, கன்மமுடிவில் அத்தத்துவங்களும் மாய்ந்தன என்பது. எண்டிசை வரை - அசுத்தமாயையும் வித்தியா தத்துவங்களும். வாரி - கன்மம்.

(நா - ம்.) மயிலின் வன்மை கூறப்பட்டது.

### 12. முருகக்கடவுளின் பரிக்கிரகசத்தி.

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.

(இ - ள்) படைபட்ட வேலவன் பால்வந்த - படையாகப்பொருந்திய வேலையுடைய முருகக்கடவுளிடத்து வந்த, வாகைப் பதாகை என்னும் தடைபட்ட சேவல் - வெற்றிக்கொடி என்று சொல்லப்படும் அவரால் தடுக்கப்பட்ட சேவலானது, சிறகடிக் கொள்ள - சிறகை அடித்துக் கொள்ள, சலதி கிழிந்து அண்ட கடாகம் உடைபட்டது - சமுத்திரம் கிழிந்து அண்டகோளகை உடைந்தது, உடு படலம் உதிர்ந்தது - நட்சத்திரக்கூட்டம் சிதறின, இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்ட - நடுவே பொருந்திய மலைகளும் மகாமேருமலையும் இடிந்தன.

குறிப்பு. 1. வாகைப் பதாகை - சேவலாகியசத்தி கன்மங்களை நுகர்வித்து. இருவினையொப்பும் மலபரிபாகமும் வருத்துதலினால் வாகைப்பதாகை எனப்பட்டது.

2. தடைபட்ட சேவல்... மாமேரு வெற்பும் இடிபட்ட: - சேவல் தனது சிறகை அடித்துக் கூவி ஆரவாரத்தலினால் அசுத்தமாயாகாரியங்களும் கன்மமும் ஒழிந்தன என்பது.

சேவல் - அசுத்தமாயையைக் காரியப்படுத்துஞ் சத்தி.
சிறகடிக்கொள்ளல் - காரியப்படுத்தல்.
சலதி கிழிதல் - கன்மம் நீங்குதல்.

அண்ட கடாகம் உடைபடல் - பிரகிருதி மாயை நீங்குதல்.

உடுபடலம் உதிர்தல் - பிரகிருதி மாயாதத்துவங்கள் இருபத்துநான்கும் நீங்குதல்.

இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபடல் - அசுத்தமாயைக்கும் பிரகிருதிக்குமிடையிலுள்ள வித்தியாதத்துவங்கள் ஏழும் சுத்த மாயையும் அழிதல்.

ஞானத்தைப் பெற்ற சேவல் ஞானத்தின்பயனுகிய சிவப்பேற்றை அடையாது தடுக்கப்பட்டு மாயையைக் காரியப்படுத்தும் பணியைப்பெற்றதனுல், "தடைபட்ட சேவல்" என்றுர்.

(தா - ம்.) சேவலின் வன்மை கூறப்பட்டது.

### 13. பரநாதம்.

**ஒருவரைப் பங்கி லுடையாள் குமார னுடைமணிசேர்**
**திருவரைக் கிங்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்**
**வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்**
**பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.**

(இ—ள்.) ஒருவரைப் பங்கில் உடையாள் குமாரன் - சிவபெருமானை வலப்பாகத்திலுடைய உமாதேவியாரது குமாரராகிய முருகக் கடவுளுடைய, உடை மணி சேர் திரு அரைக் கிங்கிணி ஓசைபட - உடைமணி பொருந்திய திருவரையிற் கட்டப்பட்ட கிங்கிணியின் ஓசை உண்டாக, அரக்கர் திடுக்கிட்டு வெருவர - அசுரர் திடுக்கிட்டு அஞ்ச, திக்குச் செவிடு பட்டு எட்டு வெற்பும் கனகப் பருவரைக் குன்றும் அதிர்ந்தன - திசைகள் செவிடுபட்டு அத்திசைகளிலுள்ள எட்டு மலைகளும் பெரிய பொன்மலையாகிய மகாமேருவும் நடுங்கின, தேவர் பயம் கெட்டது - தேவர்களுடைய பயமும் தீர்ந்தது.

குறிப்பு. 1. ஒருவரைப் பங்கி லுடையாள் குமாரன் - சிவபெருமானேடு பிரிவற்றிருக்கும் பராசத்தியிலே தோன்றிய ஞானசத்தியாகிய சுப்பிரமணியக்கடவுள்.

2\. உடைமணிசேர் திருவரைக் கிங்கிணியோசைபட—பரநாதமாகிய அவருடைய ஞானசத்தி வியாபரித்த பொழுது. கிங்கிணியோசை - பரநாதத்தைக் குறிக்கும். உடைமணி - அரையிற் கட்டியமணி.

3\. அரக்கர் திடுக்கிட்டு வெருவர - மலமாயாகன்மங்கள் வலிகுன்ற. வெருவுவர என்பது வெருவர எனக் குறைந்து நின்றது. வெருவு - அச்சம்.

4\. எட்டு வெற்பும் - அசுத்தமாயையும் வித்தியாதத்துவங்கள் ஏழும்.

5\. கனகப்பருவரை — சுத்தமாயை.

6\. தேவர் பயம் கெட்டது - ஆன்மாக்கள் மலமாயைகன்மங்களினின்று நீங்கிச் சுத்தாவத்தை எய்தினர் என்பது.

(தா - ம்.) பரநாதமாகிய ஞானசத்தியின்வன்மை கூறப்பட்டது.

## 14. விடயப்பற்றற வேண்டல்.

**குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடு மைவரிற் கொட்படைந்த**
**இப்பாச நெஞ்சனை யீடேற்று வாயிரு நான்குவெற்பும்**
**அப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணாருமுய்யச்**
**சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே.**

(இ - ள்.) இரு நான்கு வெற்பும் அப் பாதியாய் விழ - அட்டகிரிகளும் பாதிபாதியாய் விழவும், மேரும் குலுங்க - மேருமலையுங் குலுங்கவும், விண்ணாரும் உய்ய - தேவர்களும் பிழைக்கவும், சப்பாணி கொட்டிய ஆறிரண்டு கை உடைச் சண்முகனே - சப்பாணிகொட்டின பன்னிரண்டு கைகளையுடைய ஆறுமுகக்கடவுளே, குப்பாச வாழ்க்கையுள் கூத்தாடும் — அற்பமாய வாழ்வினுள் நிகழும் போகங்களைப்பற்றிக் கூத்தாடுகின்ற, ஐவரில் கொட்பு அடைந்த - பஞ்சப்பொறிகளாற் சுழற்சியை அடைந்த, இப்பாச நெஞ்சனை - இந்த மயக்கம்பொருந்திய மனத்தையுடையேனை, ஈடேற்றுவாய் - ஈடேற்றியருள்வீராக.

**குறிப்பு.** 1. குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடும் ஐவர் - நிலையற்ற பொய்வாழ்விலே நடைபெறும் சத்தாதிவிடய போகங்களை அறிந்துபற்றி அவற்றில் அழுந்தும் ஐம்பொறிகள். கு - சிறிய. பாசவாழ்க்கை - மாய வாழ்வு. பாசம் - மாயை.

ஐம்பொறிகள் விடயபோகங்களில் ஒன்றைப்பற்றி அழுந்தி, அதனை விட்டு வேறொன்றைப்பற்றி அழுந்தி, இங்ஙனம் பற்றுவதும் விடுவதுமாயிருக்கும் தன்மையுடைத்தாதலின் ''கூத்தாடும்'' என்றார்.

இங்ஙனம் பொறிகள் கூத்தாடுவதற்குக் காரணம் அவற்றைச் செலுத்தி நிற்கும் மயக்கம் பொருந்திய மனம் ஆதலின், ''பாச நெஞ்சு என்றார்.'' பாசம் - மயக்கம், மோகம்.

2. இரு நான்கு வெற்பு - அசுத்தமாயையும் வித்தியாதத்துவங்கள் ஏழும்.

3. மேரு – சுத்தமாயை.

4. விண்ணோர் - ஆன்மாக்கள்.

5. சப்பாணி கொட்டுதல் - கை கொட்டல்.

6. கையாறிரண்டு – பாசக்ஷயஞ்செய்யும் திருக்கரங்கள் பன்னிரண்டு.

(நா - ம்.) விடயபோகங்களில் உழலுகின்ற அடியேனை இரட்சிப்பாயாக.

## 15. திருவருட்சிறப்பு.

**தாவடி யோட்டு மயிலிலுந் தேவர் தலையிலுமென்**
**பாவடி யேட்டிலும் பட்டதன் றோபடி மாவலிபான்**
**மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்**
**சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே.**

(இ - ள்.) மாவலிபால் அன்று மூவடி படிகேட்டு – மாவலி என்னும் அசுரராசனிடம் அந்நாளில் மூன்றடி

நிலம் தாவென்று கேட்டு அவன் அதற்கு இசைந்தபின், மூது அண்ட கூடம் முகடு முட்டச் சேவடிநீட்டும் பெருமான் - பழைய அண்டகோளகையின் உச்சியில் முட்டும்படி தமது திருவடியை நீட்டின திருமாலுடைய, மருகன் தன் சிற்றடி - மருகராகிய முருகவேளுடைய சிறிய திருவடியானது, தாவடி ஒட்டும் மயிலிலும் - அசுரருடைய போரிற் செலுத்திய மயிலிலும், தேவர் தலையிலும் – தேவர்களுடைய சிரசிலும், என் பாவடி ஏட்டிலும் - எனது பாக்கள் எழுதப்பட்ட ஏட்டிலும், பட்டது - பதிந்தது. அன்று, ஒ - அசைகள்.

குறிப்பு: 1. மாவலிபால் மூவடி கேட்டு - மாவலிச் சக்கரவர்த்தி பிரகிலாதன் புத்திரனாகிய விரோசனன் மகன். தேவர்களை இவன் துன்புறுத்த, அவர்கள் விஷ்ணுபால் முறையிட, அவர் குறள்வடிவங்கொண்டு சென்று மூன்றடிமண் கேட்டு வாங்கிப் பூமியை ஓரடியாகவும், ஆகாயத்தை ஓரடியாகவும் அளந்து, மூன்றும் அடிக்கு அவன் தலைமேலே திருவடியை ஊன்ற நெரிந்திறந்தவன்.

2. மூதண்ட கூடம் - பிரகிருதி மாயை. திருமாலின் அதிகாரம் பிரகிருதிக்கப்பாலில்லை என்பது.

3. தாவடி - போர். மயில் – கன்மங்களை நுகர்விக்கும் திரோதசத்தி.

4. தேவர் - பக்குவமடைந்த ஆன்மாக்கள், மலபரிபாகமெய்திய ஆன்மாக்கள்.

(தா—ம்.) மலமாயை கன்மங்களைப் போக்குவதும் ஆன்மாக்களை ஆட்கொள்வதும் என்னைப் பாடுவித்ததும் முருகக்கடவுளின் திருவருளாம்.

### 16. திருவருள்பெறுதற்குபாயம்.

தடுங்கோண் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோ ளிருந்த படியிருங் கோளெழு பாருமுய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் துளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே.

(இ—ள்.) மனத்தை தடுங்கோள் – விடயபோகங்களிற் செல்லாதபடி மனத்தைத் தடைசெய்யுங்கள், வெகுளியை விடுங்கோள் - கோபத்தை விடுங்கள், என்றும் தானம் இடுங்கோள் - எந்நாளும் தானங்களை நிஷ்காமியமாகச் செய்யுங்கள், இருந்தபடி இருங்கோள் - முற்கூறியபடி விருப்பு வெறுப்பின்றியும் தருமம் செய்துகொண்டும் இருங்கள், இங்ஙனம் செய்வீராயின், எழு பாரும் உய்ய - ஏழுலகங்களும் பிழைக்கும்படி, கொடும் கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைக்க வைவேல் விடுங்கோன் அருள் - கடிய கோபத்தையுடைய சூரனோடு கிரௌஞ்சகிரியும் துவாரமாகும்படி துளைக்கும் பொருட்டு கூரிய வேற்படையைச் செலுத்திய இறைவராகிய முருகக்கடவுளது திருவருளானது, தானே வந்து உமக்கு வெளிப்படும் - தானாக வந்து உமக்குத் தோன்றும்.

குறிப்பு. 1. விருப்பு வெறுப்புக்களால் நல்வினை தீவினைகளும், இவற்றாற் பிறப்பிறப்பும் விடாது வருமாதலின் ''தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியை'' என்றார்.

2. தானம் நிஷ்காமியமாகச் செய்யாவிடின், அது காமியமாய்ப் பிறப்பிற் செலுத்தும்.

3. எழுபாருமுய்ய - ஏழுலகங்களிலுமுள்ள ஆன்மாக்கள் ஈடேறும்படி. ஏழுலகங்களாவன:- பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தவலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்னும் உலகங்கள்.

4. கொடுங் கோபச் சூருடன் குன்றந் திறக்கத் துளைக்கவைவேல்-மல மாயாகன்மங்களைப் போக்கும் முருகவேளுடைய ஞானசத்தி.

(தா—ம்.) விருப்பு வெறுப்பற்றிருங்கள். நிஷ்காமியமாகத் தானஞ் செய்யுங்கள். திருவருள்தோன்றும் என்பதாம்.

17. நெஞ்சுக்கறிவுறுத்தல்.

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக வல்லும் பகலுமில்லாச்
சூதான தற்றவெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே.

(இ—ள்.) வேதாகமம் - வேதாகமங்களின் உண்மைப் பொருளையுணர்த்தும், சித்ர வேலாயுதன்-பேரழகுபொருந்திய வேற்படையையுடைய முருகக் கடவுளினது, வெட்சி பூத்த தண்டை - வெட்சிமாலை விளங்குகின்ற தண்டையை அணிந்த, பாத அரவிந்தம்—திருவடித் தாமரையை, அரண் ஆக - நமக்குக் காவலாகக் கொண்டு, அல்லும் பகலும் இல்லா சூதானது அற்றவெளிக்கே ஒளித்துச்சும்மாவிருக்க- கேவல சகலங்களில்லாத சுத்தமான அருள் வெளியிலே மறைந்து மௌனமாயிருக்கும்படி, மனமே இனிபோதாய்- மனமே இனிச் செல்வாயாக, ஒருபூதர்க்கும் தெரியாது - இந்நிலை பிரபஞ்சப்பற்றுள்ள உலகத்தவர் ஒருவருக்கும் தோன்ருது.

குறிப்பு. 1. அரண்—காவல், தஞ்சம், அடைக்கலம்.

2. அல்லும் பகலும் - கேவல சகலங்கள்.

3. சும்மாவிருத்தல் — மனம் வாக்குக் காயங்களின் செயலின்றி மௌனமாயிருத்தல். (செ—10 கு. 1. பார்.)

4. பூதர் — பூதசம்பந்தமுடையவர், பெத்தர்.

5. வெட்சி - பாசத்தளையினின்றும் பசுக்களை மீட்டலைக் குறிப்பது.

(தா—ம்.) மனமே! முருகவேளின் திருவடியைத் தஞ்சமாகக்கொண்டு கேவல சகலங்களை நீத்துச் சுத்தநிலையிலிருக்கச் செல்வாயாக. இந்நிலை பெத்தருக்குக் கிட்டாது.

18. அறஞ்செய்ய வேண்டுமெனல்

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே

(இ — ள்.) இங்ஙன் - இவ்வுலகத்திலே, வெய்யிற்கு ஒதுங்க உதவா உடம்பின் வெறு நிழல்போல - வெய்யிலுக்குத் தானும் ஒதுங்கிநிற்க உதவாத உடம்பினது பிரயோசனமற்ற நிழல்போல, கையில் பொருளும் கடைவழிக்கு நும்கட்கு உதவாது - உங்கள் கையிலுள்ள பொருளும் மரணத்தின் பின் செல்லும் வழிக்கு உங்களுக்கு உதவாது. ஆதலின், வையின் கதிர் வடிவேலோனை வாழ்த்தி—கூர்மையும் ஒளியும்பொருந்திய வேற்படையையுடைய முருகக் கடவுளைத் துதித்து, என்றும் வறிஞர்க்கு நொய்யின் பிளவு அளவு எனும் பகிர்மின்கள் - எந்நாளும் வறியோருக்கு ஒரு நொய்யரிசியின் பாதியளவாயினும் பகிர்ந்து கொடுங்கள்.

குறிப்பு. 1. வை - கூர்மை. வையில்—பூமியில் எனினும் பொருந்தும். வையம் என்பதன் விகாரம்.

2. கதிர்வடிவேல் - கிரணம் வடிகின்ற வேல், ஒளி வீசும் வேல். வடிதல், - ஒழுகுதல்.

3. கடவுளை நினையாது செய்யும் அறம் நிஷ்காமியமாகாது காமியமாய் முடிதலின் "வேலோனை வாழ்த்தி" என்றார்.

4. நொய் - கப்பி, குறுணி.

5. காணும் - முன்னிலையசை.

(தா—ம்.) உங்கள் செல்வமும் நீங்கள் இறந்தபின் உங்களுக்குத் துணையாக உதவாதாதலின், இருக்கும்பொழுதே முருகக்கடவுளை வாழ்த்தித் தருமஞ் செய்யுங்கள்.

19. சாக்கிராதீதநிலை.

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் துளைத்தவைவேன்
மன்ன கடப்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே. [பூண்

(இ—ள்.) சொன்ன கிரௌஞ்சகிரி ஊடுருவத் துளைத்த- பொன்மயமான கிரௌஞ்சமலை ஊடுருவும்படி துளைத்த, வைவேல் மன்ன - கூரியவேற்படையையுடைய இறைவரே, கடம்பின் மலர்மாலை மார்ப - கடப்ப மலராலாய மாலையை அணிந்த மார்பையுடையவரே, எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு - கருவிகள் எல்லாம் அடங்கிய தத்துவாதீத நிலையை அடைந்து, மௌனத்தை உற்று — மௌனநிலையை அடைந்து, நின்னை உணர்ந்து உணர்ந்து - உம்மை அறிந்து அறிந்து, என்னை மறந்து இருந்தேன் - யான் என்னும் மயக்க உணர்வு தோன்றாது உம்முடன் ஏகனாயிருந்தேன், இவ்வுடம்பு இறந்தேவிட்டது - அந்நிலையில் எனது எனப்படும் இவ்வுடலின் வாசனையும் அழிந்தொழிந்தது.

குறிப்பு. 1. சொன்ன கிரௌஞ்சகிரி யூடுருவத் துளைத்த வைவேல் - மாயாமலத்தை நீக்கும் ஞானசத்தியாகிய வேல். சொன்ன கிரௌஞ்சகிரி - மயக்கத்தைச் செய்யும் மாயை.

2. கடம்பின் மலர் மாலை — கடப்பமாலை முருகவேளுக்கு ஆபரணமாய் அவருடைய சொரூபலக்கணங்களுள் ஒன்றான ஞானத்தைக் குறிக்கும்.

3. எல்லா மொருங்கிய நிர்க்குணம் பூண்டு - முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மபோதமும் நீங்கிய சுத்தாவத்தையை அடைந்து.

4. மௌனத்தை யுற்று - மன வாக்குக் காயங்களின் செயலின்றி அருளே தானாகவிருக்கும் துரியநிலை,

5. நின்னை யுணர்ந்துணர்ந் தென்னை மறந்திருந்தேன் - இறை பணி நின்று யான் எனப்படும் மயக்க உணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை தோன்றாது சிவத்தோடு ஏகனாகிநின்றேன் என்பது.

6. இவ்வுடம்பு இறந்தேவிட்டது - ஏகனாகி நிற்கும் நிலையில், மலவாசனையன்றி, மாயை கன்மங்களின் வாசனையும் நீங்கியது என்பது.

(தா—ம்.) முருகக்கடவுளே! அடியேன் உம்முடன் ஏகனாகிநின்றேன். அந்நிலையில் மாயாகாரியமான இவ்வுடம்பின் வாசனை சிறிதும் தோற்றாதிருந்தது.

### 20. அறஞ்செய்ய வேண்டுமெனல்.

**கோழிக் கொடிய னடிபணி யாமற் குவலயத்தே**
**வாழக் கருது மதியிலி காளுங்கள் வல்வினைநோய்**
**ஊழிப் பெருவலி யுண்ணவொட் டாதுங்க ளத்தமெல்லாம்**
**ஆழப் புதைத்து வைத்தால் வருமோநும் மடிப்பிறகே.**

(இ—ள்.) கோழிக் கொடியன் அடி பணியாமல் - கோழிக் கொடியையுடையவராகிய முருகக்கடவுளுடைய திருவடிகளை வணங்காமல், குவலயத்தே வாழக் கருதும் மதியிலிகாள் - இப்பூமியிலே வாழ்வதற்கு நினைக்கின்ற அறிவிலிகளே, உங்கள் வல்வினை நோய் இப்பெருவலி ஊழ் உங்களுடைய வல்வினை நோயாகிய இந்தப் பெரிய வலிமை பொருந்திய ஊழானது, உங்கள் அத்தம் எல்லாம் உண்ண ஒட்டாது - உங்கள் பொருள்களை எல்லாம் அநுபவிக்கவிடாது, ஆழப்புதைத்துவைத்தால் நும் அடிப்பிறகே வருமோ - நீங்களும் அநுபவியாது இரப்போர்க்கும் ஈயாது அவற்றை ஆழமாகப் புதைத்துவைத்தால் நீங்கள் இறக்கும்பொழுது உமக்குத் துணையாக உங்கள் அடியின் பின்னே தொடர்ந்துவருமோ சொல்லுங்கள்.

குறிப்பு. 1. கோழிக் கொடி - (பார், செய். 12)

2. வல்வினை நோய் - கொடிய தீவினைப்பயனாகிய துன்பம். முன்செய்த தீவினையின் பயன் இப்பிறப்பிலே துக்கவடிவாய் அநுபவத்திற்கு வருதலின், அதனை ''நோய்'' என்றார்.

3. பெருவலி ஊழ் - நல்வினை தீவினைகளின் பயன் அநுபவத்தாலன்றி ஒழியாதாதலின் ''பெருவலி ஊழ்'' என்றார்.

4. உண்ணவொட்டாது - பொருளுண்டாயினும் அதனை அநுபவிக்கவும், நல்வழியிற் செலவிடவும் முற்பிறவிகளிற் செய்த நல்வினைப்பயனாகிய புண்ணியம் இருந்தாலன்றிக் கூடாதாதலின், ஊழ் உண்ண வொட்டாது என்றார்.

5. உங்களத்தமெல்லாம் அடிப்பிறகே - இப்பிறப்பிலாயினும் முருகக்கடவுளை வணங்கி இரப்போருக்குங் கொடுங்கள். அது சிவபுண்ணியமாய் உம்மைத் தொடரும் என்பது.

(தா—ம்.) முருகக்கடவுளை வாழ்த்தி அறஞ்செய்யுங்கள். அது புண்ணியமாய் உங்களைத் தொடரும்.

### 21. மரணவேதனை.

**மரணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை**
**கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிங் கிணிமுகுள**
**சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா**
**பரணக்ரு பாகர ஞானு கரசுர பாஸ்கரனே.**

(இ—ள்.) கிங்கிணி முகுள சரண - சதங்கைகளாகிய அரும்புகள் பொருந்திய திருவடியையுடையவரே, பிரதாப சசிதேவி மங்கல்ய தந்து ஆபரணரக்ஷ கிருபாகர - கீர்த்தி பொருந்திய இந்திரன் மனைவியுடைய திருமங்கல நாணாகிய ஆபரணத்தைக் காத்தருளிய கருணாகரனே, ஞான ஆகர சுர பாஸ்கரனே - ஞானத்துக்கு உறைவிடமாயுள்ள ஞான சூரியரே, என்றும் வாய்த்த துணை - எந்நாளும் நமக்குச் சிறந்த துணையாக, கிரணக்கலாபியும் வேலும் உண்டு - உம்முடைய ஒளிபொருந்திய தோகையையுடைய மயிலும் வேற்படையும் உண்டு. ஆதலின், மரணப்பிரமாதம் நமக்கு இல்லையாம் - மரணமயக்கம் எமக்கு இல்லையாகும்.

குறிப்பு. 1. கிங்கிணி – (செய். 13. குறி. 2. பார்.)

2. சுரன் பாஸ்கரனே என்றது சுரபாஸ்கரனே என நின்றது. சுரன் - அறிஞன், ஞானி.

3. மரணப் பிரமாதம் .. :- முருகக்கடவுளது திரோதான சத்தியாகிய மயில் கன்மத்தையூட்டி இருவினையொப்பும் மலபரிபாகமும் வருவித்தவிடத்து அவருடைய ஞான சத்தியாகிய வேல் மல மாயா கன்மங்களை முற்றுக ஒழித்து ஞானத்தை அருளிச் சுத்தநிலையில் வைத்தமையால், அடியேனுக்கு இயமவாதனை இல்லை என்பது.

(தா—ம்.) ஞானசூரியனுகிய முருகக்கடவுள் மும்மலங்களையும் நீக்கி அருள்நிலையில் வைத்தமையால் அடியேனுக்கு மரண வாதனை இல்லை என்பதாம்.

## 22. தமிழின் பெருமை.

**மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்**
**வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்**
**கைதா னிருப துடையான் றலைபத்துங் கத்தரிக்க**
**எய்தான் மருக னுமையாள் பயந்த விலஞ்சியமே.**

(இ—ள்.) உமையாள் பயந்த இலஞ்சியம் - உமாதேவியார் ஈன்றருளிய சரவணபவரும், வெய்ய வாரணம்போல்- கொடிய யானையின் கைபோல, கை இருபது உடையான் தலை பத்தும் - இருபது கைகளையுடையவனுகிய இராவணனுடைய பத்துத் தலைகளையும், கத்தரிக்க - வெட்டும்படி, எய்தான் மருகன் - பாணத்தை எய்தவராகிய திருமாலுடைய மருகரும், மொய்தார் அணிகுழல் - நெருங்கிய பூமாலை அணிந்த கூந்தலையுடைய, வள்ளியை வேட்டவன்- வள்ளிநாயகியாரை விரும்பி ஆட்கொண்டு சுத்தநிலையில் வைத்தவரும் ஆகிய முருகக்கடவுள், முத்தமிழால் வைதாரையும் - முத்தமிழ்ப்பாக்களால் தம்மை இகழ்ந்து பாடினவரையும். அங்கு வாழவைப்போன் - அச் சுத்த நிலையில் வாழும்படி செய்பவராவர்.

குறிப்பு. 1. முத்தமிழ்:— இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ். இயற்றமிழாவது:- எழுத்து, சொல் முதலிய இலக்கணம் தழுவி வருவது.

இசைத்தமிழாவது:- சுருதி, சுரம் முதலியன தழுவி வருவது.

நாடகத்தமிழாவது:- தாளம், அபிநயம் முதலியன தழுவிவருவது.

2. இலஞ்சியம் - வாவியிற் றோன்றிய பொருள். இலஞ்சி - வாவி. ஐம் - பிறந்தது.

3. உமையாள் பயந்த இலஞ்சியம் எனவே முருகக்கடவுள் ஞானசொரூபர் என்பதும், ''திருமால் மருகன்'' எனவே தெய்வயானையம்மையாராகிய கிரியாசத்தியை யுடையவர் என்பதும், வள்ளியை வேட்டவன் எனவே ஞானகுரு என்பதும் பெறப்படும்.

(தா—ம்.) முருகக்கடவுள் தம்மைத் தமிழ்ப்பாக்களால் இகழ்ந்து பாடினவரையும் நற்கதியிற் சேர்த்தருளுவர் என்பதாம்.

23. உடல் நீங்குமுன் இரட்சிக்க வேண்டல்.

**தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே**
**வைவைத்த வேற்படை வானவ னேமற வே னுனைநான்**
**ஐவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி யதிலிரண்டு**
**கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே.**

(இ—ள்.) தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழும் செழும் சுடரே - தெய்வத்தன்மை பொருந்திய திருச்செங்கோட்டு மலையில் எழுந்தருளியிருக்கும் ஞான சோதியே, வைவைத்த வேல்படை வானவனே - இயல்பாகவே கூர்மை அமைந்துள்ள வேற்படையையுடைய கடவுளே, நான் உனை மறவேன் - அடியேன் உம்மை மறக்க மாட்டேன், ஐவர்க்கு இடம் பெறக்கால் இரண்டு ஓட்டி -

பொறிகள் ஐந்துக்கும் இடமுண்டாகக் கால்கள் இரண்டையும் உட்செலுத்தி, அதில் இரண்டு கைவைத்த வீடு குலையு முன்னே-அதனிடத்து இரண்டு கைகளையும் வைத்து அமைக்கப்பட்ட சரீரமாகிய இந்த வீடு அழியுமுன், வந்து காத்தருள் - வந்து காத்தருளுவீராக.

குறிப்பு. திருச்செங்கோடு - கொங்குநாட்டிலுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம். இது திருச்செங்குன்றூர் என்றும் நாகாசலம் என்றும் சொல்லப்படும்.

(தா—ம்.) முருகக்கடவுளே! நிலையில்லாத இச்சரீரம் அழியுமுன் என்னை ஆட்கொள்வீராக.

## 24. ஞானோபதேச மகிமை.

**கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன**
**குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்**
**சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை**
**முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே.**

(இ—ள்.) முன்னம் குறிச்சியில் சென்று - முற்காலத்திற் குறிஞ்சி நிலத்தூருக்குச் சென்று, கோடு குழல் சின்னம் குறிக்க - வாத்தியக்காரர் கொம்பையும் குழலையும் சின்னத்தையும் ஊத, குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை-குறிஞ்சி நிலத்துக்குரிய வேடர்மகளாகிய வள்ளிநாயகியை, கல்யாணம் முயன்றவனே — கலியாணம் செய்தவரே, நீ-தேவரீர், கின்னம் குறித்து - என் துயரத்தை நீக்கக் கருதி, அன்று அடியேன் செவி கேட்கச் சொன்ன குன்னம் — அந்நாளில் அடியேன் காதிற் கேட்கும்படி உபதேசித்த இரகசியம், குறிச்சி வெளியாக்கிவிட்டது - இக்குறிஞ்சிநிலத்திலே தன்னை வெளியாக்கிவிட்டது.

குறிப்பு. 1. கின்னம் - துயரம்.

2. குன்னம்-இரகசியம், மெய்ஞ்ஞானோபதேசம். அவ்வுபதேசம் எனது நிலையை வேருக்கித் தன்வடிவாக்கிக்

கொள்ள, அதை இந்நாட்டார் அறிந்து அடியேன் ஞானி என்று பிரசித்தப்படுத்தினர்.

3. கிழவர் - உரியோர், தலைவர்.

(தா—ம்.) வள்ளிநாயகியாரை ஆட்கொண்ட முருகக் கடவுள் அடியேனையும் ஆட்கொண்டார் என்று உலகத்தவர் வெளிப்படையாகக் கூறுகின்றனர்.

25. அடியார் இயமனுக்கஞ்சார்.

**தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்**
**திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்**
**தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்**
**கண்டா யடாவந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.**

(இ—ள்.) அடா அந்தகா - அடா இயமனே, செந்தில் வேலனுக்குத் தொண்டு ஆகிய என் அவிரோத ஞானச் சுடர்வடிவாள் கண்டாய் - திருச்செந்திலில் முருகவேளுக்கு அடிமையாகிய எனது அவிரோத ஞானமாகிய ஒளிபொருந்திய கூரிய வாள் என் கையிலிருப்பதைப் பார்த்தாயல்லவா, என் கைக்கு எட்ட சற்று வந்து பார் - என் கைக்கு எட்டும்படி சற்றே வந்துபார், தண்டாயுதமும் திரிசூலமும் விழ உன்னைத் தாக்கி - உன் கையிலிருக்கும் தண்டாயுதமும் முத்தலைச்சூலமும் கீழே விழும்படி உன்னை மோதி, திண்டாட வெட்டி விழவிடுவேன் - கலங்கும்படி வெட்டிக் கீழே விழுத்துவேன்.

குறிப்பு. 1. திண்டாடல் — கலங்குதல்.
2. அவிரோதஞானம்- தடையிலாஞானம், சுத்தஞானம்.

(தா—ம்.) முருகக்கடவுளுடைய தொண்டர் இயமனுக்கு அஞ்சமாட்டார் என்பதாம்.

26. சிவயோகிகள் பிறப்பிறப்பற்றவர்.

**நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்**
**கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன**
**சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே**
**காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே.**

(இ—ள்.) நீலச் சிகண்டியில் ஏறும் பிரான் - நீலநிறம் பொருந்திய மயில்வாகனத்தின்மேல் ஏறிவருகின்ற பெருமானும், எந்த நேரத்திலும் கோலக் குறத்தியுடன் வருவான் - அடியார் தியானிக்கும் எந்தவேளையிலும் அழகு பொருந்திய குறமகளாகிய வள்ளிநாயகியோடு வருபவரும், குருநாதன் - குருநாதருமாகிய முருகக்கடவுள், சொன்ன சீலத்தை - திருவாய்மலர்ந்தருளிய துறவொழுக்கத்தைத்தரும் உபதேசமொழியை, மெள்ளத் தெளிந்து அறிவார் சிவயோகிகளே—கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர்களாகிய சிவயோகிகளே, காலத்தைவென்று இருப்பார்—காலதத்துவத்தை வென்று பிறப்பிறப்பற்றிருப்பார்கள், வெறும் கர்மிகளே மரிப்பார் - வெறும் கர்மிகளே பிறந்திறப்பர்.

குறிப்பு. 1. சீலம் - நல்லொழுக்கம்.

2. சிகண்டம் - தோகை. சிகண்டி - தோகையை உடையது.

3. மெள்ளத் தெளிந்தறிவார் சிவயோகிகள் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து ஞானநிட்டைகூடி அநுபவிக்கும் சிவயோகிகள்.

4. காலம் - வித்தியா தத்துவங்கள் ஏழனுள் ஒன்று. அது சரீராதிகளைப் பரிணமித்து அழியச்செய்வது.

5. வெறுங்கர்மிகள் - ஞானகுருவின் உபதேசத்தாற் பிறப்பிறப்புக்களை நீக்கலாமென்றெண்ணாது சரியை கிரியைகளே தவம் என்றெண்ணி அவற்றைமாத்திரஞ் செய்து கொண்டிருக்கும் கிரியையாளர்.

(தா - ம்.) சிவயோகிகள் பிறப்பிறப்பிற்படார். ஏனையோர் பிறந்திறப்பார்.

27. இயம பயமின்மை.

ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு மேகந்த வேண்மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.

(இ - ள்.) ஓலையும் தூதரும் கண்டு திண்டாடல் ஒழித்து - இயமனால் விடுக்கப்படும் ஓலையையும் தூதுவரையும் கண்டு அடியேன் கலக்கமுறுதலை நீக்கி, கந்தவேள் மருங்கில் கட்டிய சேலையும் - முருகவேள் திருவரையிற் கட்டிய ஆடையும், சீராவும் - கவசமும், கையில் சிவந்த செச்சை மாலையும் - தோளில் அணிந்த சிவந்த வெட்சிமாலையும், சேவல் பதாகையும் - கோழிக் கொடியும், தோகையும் - மயிலும், வாகையும் - வேலாயுதமுமாகிய இவைகள், காலையும் மாலையும் எனக்கு முன்னிற்கும் - பகலும் இரவும் எனக்கு முன்னே நிற்கும்.

குறிப்பு. 1. மருங்கிற் சேலை - திருவருள்,

2. சீரா - கவசம், திருவருள்.

3. செச்சை - (செய். 17. பார்.)

4. சேவற் பதாகை - (செய். 12. பார்.)

5. தோகை - (செய். 11. குறி. 5. பார்.)

6. வாகை - வெற்றி. அது வெற்றியைக் கொடுக்கும் வேலுக்கு ஆகு பெயராயிற்று.

(தா - ம்.) முருகக்கடவுளுடைய திருவுருவம் எந்நேரமும் எனக்கெதிரே தோன்றுவதாதலால், இயமனுக்கு யான் அஞ்சவேண்டுவதில்லை.

28. முருகக்கடவுளது பரத்துவம்.

**வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி**
**மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய**
**லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று**
**போலே யிருக்கும் பொருளையெவ் வாறு புகல்வதுவே**

(இ - ள்.) வேலே விளங்கு கையான் - வேற்படை விளங்குகின்ற திருக்கரத்தையுடைய முருகக்கடவுளுடைய, செய்ய தாளினில் வீழ்ந்து இறைஞ்சி - சிவந்த திருவடியில் வீழ்ந்து வணங்கி, மாலே கொள - அன்பாகிய மயக்

கம் மிக, இங்ஙன் காண்பதல்லால்- இத்தன்மையான சகள வடிவாகக் காண்பதல்லாமல், மனவாக்குச் செயலாலே அடைதற்கு அரிதாய் - மனம் வாக்குச் செயல்களாலே அடைதற்கரிய நிஷ்களமாயும், அருவுருவாகி ஒன்றுபோலே இருக்கும் - நிஷ்களசகளமான ஒரு வடிவாயும் இருக்கும், பொருளை - பரம்பொருளாகிய அந்த முருகக்கடவுளை, எவ்வாறு புகல்வது — இத்தன்மையரென்று எடுத்துக் கூறுவது எப்படி?

குறிப்பு. வேலே விளங்கு கையான் - முருகக்கடவுளது சகளவடிவம். சகளம், சகளநிஷ்களம், நிஷ்களமாகிய மூன்றும் முருகக்கடவுளது தடத்தலக்கணம் எனப்படும். ஆகவே, சுப்பிரமணியக்கடவுள் சிவபெருமானினின்றும் வேறாகாத பரப்பிரமமாய் நின்ற ஒரே பொருள் என்பது பெறப்படும். ''அருவமு முருவுமாகி அநாதியாய்ப் பலவா யொன்றாய்ப், பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக், கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே, ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய'' என்றும், ''ஈறிலாதமர் பரமனே குழவியி னியல்பாய் - ஆறுமாமுகங் கொண்டுதித் தானென்ப தல்லால் - வேறு செப்புதற்கியையுமோ மேலவன்றன்மை - தேறியுந்தெளி கின்றில வுமது சிந்தையுமே', என்றும், ''ஈசனேயவ னுடலான் மதலையா யினன்காண் - ஆசிலாவவ னறுமுகத் துண்மையா லறிநீ - பேசிலாங்கவன் பரனொடு பேதக னல்லன் - தேசுலாவகன் மணியிடைக்கதிர்வரு திறம்போல்'' என்றும் கந்தபுராணம் கூறுமாற்றால் அறிக.

(தா - ம்.) அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூவகைத் திருமேனிகளையுடைய பரம்பொருளாகிய முருகக்கடவுளை உருவத்திருமேனியிற் கண்டு வழிபடுதலன்றி, உண்மைநிலையை எடுத்துக்கூற முடியாதென்று அவரது பரத்துவம் கூறியவாறு.

29. மாதராசை ஒழிதல்.

கடத்திற் குறத்தி பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே.

(இ - ள்.) சித்ர மாதர் அல்குல் படத்தில் - அழகிய பெண்களுடைய அல்குலாகிய பாம்பின் படத்திலும், கழுத்தில் — கழுத்திலும், பழுத்த செவ்வாயில் - பழுத்த சிவந்த வாயிலும், பணையில் - மூங்கில்போன்ற தோள்களிலும், உந்தித் தடத்தில் - கொப்பூழாகிய சுழியிலும், தனத்தில் - முலையிலும், கிடக்கும் வெம் காம சமுத்திரம் - தங்கிக்கிடக்கின்ற கொடிய காமமாகிய கடலை, கடத்தில் குறத்தி பிரான் அருளால் - குறிஞ்சிநிலத்துள்ள குறமகளாகிய வள்ளிநாயகியுடைய தலைவராகிய முருகவேளுடைய கருணையால், கலங்காத சித்தத்திடம் புணை என - எவற்றாலுங் கலங்காத மனோதைரியத்தைத் தெப்பமாகக் கொண்டு, யான் கடந்தேன் - அடியேன் தாண்டிக் கரையேறினேன்.

குறிப்பு. 1. கடம் - மலைப்பக்கம், குறிஞ்சிநிலம்.

2. திடம் - உறுதி, வலிமை, தைரியம்.

3, பழுத்த செவ்வாய் - நன்றாகச் சிவந்த வாய். பழுத்தல் - முதிர்தல், மிகுதல்.

4. பணை - மூங்கில். அது ஆகுபெயராய்த் தோளை யுணர்த்திற்று.

(தா - ம்.) முருகவேளுடைய திருவருளால் உண்டாகிய மனோதிரத்தைக்கொண்டு பெண்ணாசையினின்றும் நீங்கினேன் என்பதாம்.

30. மாதராசை ஒழித்தற்குபாயம்.

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென் பதாகத் திரிகின்ற நீசெந்தி லோன்றிருக்கை
வேலென் கிலேகொற் றமயூர மென்கிலே வெட்சித்தண்டைக்
காலென் கிலேமன மேயெங்ங னேமுத்தி காண்பதுவே.

(இ—ள்.) மனமே - மனமே, பாவையர் - பெண்களது, மொழி பால் என்பது (ஆக) - சொல்லானது பால்போலும் இனியது என்றும், பதம் பஞ்சு என்பது (ஆக) - அடியானது பஞ்சுபோலும் மென்மையுடையது என்றும், கண் சேல் என்பது ஆக - கண்ணானது சேல்மீன்போலும் பிறழ்ச்சியுடையது என்றும், திரிகின்ற நீ - புலம்பித்திரிகின்ற நீ, செந்திலோன் திருக்கை வேல் என்கிலே - திருச்செந்திலேயுடையவராகிய முருகவேளின் திருக்கரத்திலிருக்கின்ற வேல் என்று சொல்லுகின்றிலே, கொற்ற மயூரம் என்கிலே - வெற்றியையுடைய மயில் என்று சொல்லுகின்றிலே, வெட்சித் தண்டைக் கால் என்கிலே—வெட்சிமாலேயையுந் தண்டையையும் அணிந்த திருவடி என்று சொல்லுகின்றிலே, நின்செயல் இதுவாயின், முத்தி காண்பது எங்ஙன் - யான் முத்தி அடைவது எப்படி?

(தா—ம்.) மனமே! மாதரை நிலேயாது முருகக்கடவுளே நிலேப்பாயாயின், எனக்கு முத்தி கைகூடும் என்பதாம்.

31. முத்தியை வேண்டல்.

பொக்கக் குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்நினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேரெட்ட காவலனே.

(இ—ள்.) சிந்து வெந்து - சமுத்திரமானது சுவறி, கொக்கு தறிபட்டு எறிபட்டு உதிரம் குமுகுமெனக் கக்க—சூரனகிய மாமரம் இரு பிளவாக வெட்டி எறியப்பட்டு

இரத்தம் குமுகுமென்று கொப்பளிக்கவும், கிரி ஊடுருவ - கிரௌஞ்சமலையை ஊடுருவவும், கதிர் வேல்தொட்ட காவலனே - ஒளிபொருந்திய வேற்படையைச் செலுத்திய இறைவரே, பொக்கக் குடிலில் புகுதாவகை - பொய்வீடாகிய சரீரத்திலே அடியேன் இனிப் புகாவண்ணம், புண்டரீகத்தினும் செக்கச் சிவந்த கழல்வீடு தந்து அருள்—செந்தாமரைப் பூவினும் மிகச் சிவந்த உமது திருவடியாகிய மோக்ஷ வீட்டைத் தந்தருள்வீராக.

குறிப்பு. 1. பொக்கம் - பொய்.

2. செக்கச்சிவத்தல் - மிகச்சிவத்தல், கழல்வீடு - திருவடி, சிவப்பேறு, முத்தி.

3. சிந்து வெக்து ..... கிரியுருவ - மல மாயை கன்மங்கள் நீங்கும்படி. சிந்து - கன்மம். கொக்கு - ஆணவமலம். கிரி - மாயை.

(தா—ம்.) அடியேன் இனிப் பிறவாவண்ணம் முத்தியைத் தந்தருள வேண்டும் என்பதாம்.

32. மாதராசை ஒழிக்கவேண்டல்.

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
துளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னேதுறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற வென்னை யெந்நாள்வந் திரட்சிப்பையே.

(இ—ள்.) கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்புடன் -(தன் இனத்தால்) பெருகிப் போருக்குப் புறப்பட்ட சூரனது மார்போடு, கிரி ஊடுருவத் துளைத்துப் புறப்பட்ட வேல் கந்தனே-கிரௌஞ்சமலையையும் ஊடுருவும்படி துளைத்துவெளிப்பட்ட வேற்படையையுடைய கந்தவேளே, துறந்தோர் உளத்தை வளைத்துப் பிடித்து - துறவிகளுடைய மனத்தை வசஞ்செய்து, பதைக்கப்பதைக்க வதைக்குங் கண்ணார்க்கு- மிகவும் பதைக்கும்படி துன்புறுத்தும் கண்களையுடைய

பெண்களினுல், இளைத்துத் தவிக்கின்ற என்னை - தளர்ந்து வருந்துகின்ற அடியேனை, எந்நாள் வந்து இரட்சிப்பை - எந்நாள் வந்து காத்தருளுவீர்.

(தா—ம்.) மாதர் கண்வலையிற்பட்டு வருந்தும் அடியேனை எந்நாள் வந்து இரட்சிப்பீர் என்பதாம்.

33. திருநாமவுச்சாரணத்தின் பேறு.

**முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு நுங்கெடுக்கும்**
**மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்**
**அடியார்க் குநல்ல பெருமா ளவுணர் குலமடங்கப்**
**பொடியாக் கியபெரு மாடிரு நாமம் புகல்பவரே.**

(இ—ள்.) வெற்றி வேல் பெருமாள் - வெற்றிவேலையுடைய பெருமானும், அடியார்க்கு நல்ல பெருமாள்-அடியவருக்கு வேண்டுவதைக் கொடுத்தருளும் நல்ல பெருமானும், அவுணர் குலம் அடங்கப் பொடியாக்கிய பெருமாள்-அசுரர்குலத்தை முற்றுய் அழித்த பெருமானும், ஆகிய முருகவேளுடைய, திருநாமம் புகல்பவர் – திருநாமங்களை உச்சரிப்பவர், முடியாப் பிறவிக்கடலில் புகார் - அந்தங் காணரிய பிறவிக் கடலுட் பிரவேசியார், முழுதும் கெடுக்கும் மிடியால் படியில் விதனப்படார் - இகபர இன்பங்கள் முற்றையுங் கெடுக்கும் வறுமையினுல் இப்பூமியிற் கிலேசப் படார்.

குறிப்பு. 1. அடியார்க்கு நல்ல பெருமான் முழுதுங் கெடுக்கு மிடியால் விதனப்படார்:- முருகக்கடவுள் தமது அடியவர் வேண்டிய வற்றைக் கொடுத்தருளும் கடவுளாதலின், அவ்வடியவர் வறுமையினுல் இப்பூமியில் வருந்தார் என்பது.

2. முழுதுங் கெடுக்குமிடி - வறுமையானது இம்மை மறுமை இரண்டின் சுகங்களெல்லாவற்றையுங் கெடுக்கும் என்பது. ''வடிவுந் தனமு மனமுங் குணமுங் குடியுங் குல

முங் குடிபோகியவா, அடியந் தமிலா வயில்வே லரசே, மிடியென்ெறொரு பாவி வெளிப்படினே.'' என்பது கந்தரனு பூதி.

3. அவுணர் குலமடங்கப் பொடியாக்கிய பெருமாள்- ஆன்மாக்களைப் பற்றிய மும்மலங்களையும் ஒழித்தருளும் முருகக் கடவுள், அவுணர் - பாசத்தோடு கூடிய சீவர்கள்.

4. வெற்றிவேற் பெருமாள் - மும்மலங்களையும் நீக்கி ஞானத்தைக் கொடுக்கும் முருகக் கடவுள்.

5. முடியாப் பிறவிக்கடல்-மெய்ஞ்ஞானிகளாலன்றிக் கடத்தற்கரிய பிறவிக்கடல்.

மெய்ஞ்ஞானிகள் திருவருளைப் புணையாகக்கொண்டு பிறவிக்கடலை நீந்துவர்.

6. பெருமாள் - பெருமையுடையவர். பெருமான் என் பதின் திரிபு.

(தா—ம்.) முருகக் கடவுளின் திருநாமங்களைச் சொல் லுபவர் இம்மையிற் பாக்கியமும் மறுமையில் முத்தியும் பெறுவர் என்பதாம்.

34. திருவருள் வேண்டல்.

பொட்டாக வெற்பைப் பொருதகந் தாதப்பிப் போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே.

(இ—ள்.) பொட்டாக வெற்பைப் பொருத கந்தா - துளையுண்டாகக் கிரௌஞ்ச மலையை வேற்படையாலே தாக்கிய கந்தவேளே, இரும் காமவிடாய் பட்டார்உயிரை- பெரிய காமவேட்கை யுடையோரது உயிரை, திருகிப் பரு கிப் பசி தணிக்கும் கட்டாரி வேல்விழியார் வலைக்கே - தம் வசப்படுத்தி அனுபவித்துக் காமவிடாயைதீர்க்கும்கட்டாரி

யாகிய வேற்படைபோலுங் கண்களையுடைய பரத்தையரா கிய வலையின்கண்ணே, மனம் கட்டுண்டது - என்துமனம் கட்டுப்பட்டது. தப்பிப்போன தொன்றற்கு எட்டாத ஞானகலை தருவாய் - என்வசப்படாது இங்ஙனம் தவறிப் போனதொன்றாகிய அம்மனத்துக்கு எட்டாத பதிஞா னத்தை அடியேனுக்குத் தந்தருளுவீராக.

குறிப்பு. 1. பொட்டு - நுழைவழி.

2. ஞானகலை - ஞானமாகிய கலை, ஞானபாதம். அது பதிஞானம், திருவருள்.

3. கட்டாரி - வேற்படை. (செய். 4. பார்.) கட்டாரி வேல் - இரு பெயரொட்டு.

(தா—ம்.) கந்தவேளே! மாதர்மேற் செல்லும் என் மனத்தை அடக்க உமது திருவருளைத் தருவீராக என்பதாம்.

## 35. ஆன்மசுத்தி வேண்டல்

**பத்தித் துறையிழிந் தாநந்த வாரி படிவதினன்**
**புத்தித் தரங்கந் தெளிவதென் றேபொங்கு வெங்குருதி**
**மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே**
**குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கொற்றவனே.**

(இ—ள்.) பொங்குவெம் குருதி மெத்திக் குதிகொள்ள - பொங்குகின்ற வெய்ய இரத்தம் மிகுந்து பாய, வெம் சூரனை – கொடிய சூரனை, விட்ட சுட்டியிலே – விரிந்த நெற்றியிலே, குத்தி தரங் கொண்டு – குத்தி வலியைக் கவர்ந்து, அமராவதி கொண்ட - இந்திரபுரியை சூரனி னின்றுகொண்ட, கொற்றவனே - வெற்றியுடைய முருகக் கடவுளே, நான் பத்தித்துறை இழிந்து ஆநந்தவாரி படிவ தில் - அடியேன் பத்தி என்னும் துறையில் இறங்கிப் பேரின் பக்கடலில் மூழ்கும் பொருட்டு, புத்தித் தரங்கம் தெளி வது என்றோ – என் மனமாகிய அலை அடங்கி என் அறிவு தெளிவடைவது எக்காலமோ.

குறிப்பு. 1. பத்தித்துறை - பத்திமார்க்கம்.

2. ஆநந்தம் - முருகக்கடவுளது சொரூபலக்கணங்களுள் ஒன்று.

3. படிவதில்:- இல் வேற்றுமை மயக்கம்.

4. புத்தித் தரங்கம் - மனம்முதலிய அந்தக்கரணங்களும், அவற்றைச் செலுத்திநிற்கும் வித்தியா தத்துவங்களும், அவற்றாற் செலுத்தப்படும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் முதலிய கருவிகளும்.

5. தெளிவது – போதங்கெட்டு ஆன்மா சுத்தி அடைதல்.

6. தரம் - வலி. அது ஆன்மபோதத்தைக் குறிப்பது.

7. அமராவதி கொண்ட - ஆன்மாக்களை ஆட்கொண்டதைக் குறிப்பது. அமராவதி - ஆன்மாக்கள்.

(தா—ம்.) முருகக்கடவுளே! அடியேன் பத்திமார்க்கத்தினின்று கருவிகரணங்களும் தற்போதமும் நீங்கப்பெற்றுப் பேராநந்தத்தை அநுபவிக்கும்பொருட்டு வியாபக அறிவு எய்துவது எக்காலம்.

### 36. முத்தியடைதற்குபாயம்

சுழித்தோடு மாற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக் கோட்டுமுத்தை
கொழித்தோடு காவிரிச் செங்கோட னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் இலையெங்ங னேமுத்தி கிட்டுவதே.

(இ—ள்.) நெஞ்சே - மனமே, செல்வம் சுழித்தோடும் ஆற்றின் பெருக்கானது - செல்வமானது சுழித்துக்கொண்டு ஓடுகின்ற நதியின் பெருக்கை ஒத்தது, துன்பம் இன்பம் கழித்து ஓடுகின்றது எக்காலம் - அச்செல்வம் வருதல்போதலாலே உண்டாகும் சுகதுக்கங்களை விட்டு நீங்குவது எந்த நாள். அங்ஙனம் நீங்கும்பொருட்டு, கரிக்கோட்டு முத்தைக் கொழித்து ஓடு காவிரிச் செங்கோடன் என்கிலை -

யானைக்கொம்பிலுண்டாகிய முத்துக்களை வாரிக்கொண்டு விரைந்து செல்லுகின்ற காவேரியாற்றின் கரையிலுள்ள திருச்செங்கோட்டு மலையில் எழுந்தருளியிருக்கும் கடவுள் என்று சொல்லுகின்றிலை, குன்றம் எட்டும் கிழித்து ஓடுவேல் என்கிலை - மலைகள் எட்டையும் பிளந்துபோக வல்ல வேலாயுதம் என்றும் சொல்லுகின்றிலை, முத்திகிட்டுவது எங்ஙன் - நாம் முத்தியடைவது எவ்வாறு?

குறிப்பு. 1. அதிகம் மழை பெய்தவிடத்து ஆற்றிலுள்ள நீரானது சுழித்துக்கொண்டு ஓரிடத்திலும் தங்காது விரைந்துபோதல்போல, செல்வமும் நல்வினை அநுபவிப்பவரிடத்துச் சிறிதுகாலந் தங்கித் தீவினை அநுபவிக்கும் காலம் அவரைவிட்டு விரைந்து செல்லும். இங்ஙனம் செல்வம் வந்தவிடத்து இன்பமும், போனவிடத்துத் துன்பமும் உண்டாதலின், இவ்வின்பத்துன்பங்களுக்குக் காரணமான செல்வப்பற்றை நீக்கி விருப்பு வெறுப்பற்றிருந்து முத்தியடையும்பொருட்டு முருகக்கடவுள் தியானமும் அவரது திருவருளுமே வேண்டுமாதலின், ''திருச்செங்கோடனென்கிலை'', ''வேலென்கிலை'' என்றார். அவரது ஞானசத்தியாகிய வேல் பிரபஞ்சமாகிய செல்வப்பற்றை நீக்கி ஞானத்தைக் கொடுக்குமாதலின், ''வேலென்கிலை'' என்றார்.

2. கரிக் கோட்டு முத்தைக் கொழித்தோடு காவிரிச் செங்கோடன்:- காவிரிநதி முத்துக்களை வாரிக்கொண்டு போதல்போல, முருகக்கடவுளின் ஆஞ்ஞாசத்தி ஆன்மாக்களின் கன்மங்களை நீக்கும் என்பது.

காவிரி நதி — ஆஞ்ஞாசத்தியைக் குறிக்கும்.

கரிக் கோட்டு முத்து - ஆணவமலங் காரணமாக வரும் கன்மங்களைக் குறிப்பது.

3. குன்றம் எட்டு: அசுத்தமாயையும் வித்தியாதத்துவங்கள் ஏழும். பொதுவகையால் மாயாகாரியமான மற்றைத் தத்துவங்கள் எல்லாவற்றையுங் குறிப்பது.

(தா - ம்.) மனமே! மும்மலங்கள் நீங்கி முத்தியடைதற் பொருட்டுப் பிரபஞ்சப்பற்றைவிட்டு முருகக்கடவுளைத் துதிப்பாய் என்பதாம்.

37. பத்திவைராக்கியம்.

**கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை**
**மொண்டுண் டயர்கினும் வேன்மற வேன்முது கூளித்திரள்**
**டுண்டுண் டுடுடுடு டுடு டுடுடுடு டுண்டுடுண்டு**
**டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற ராவுத்**
**[தனே.**

(இ – ள்.) முது கூளித்திரள் டுண் டுண் டுடு டுடு டுடு டுடு டுடு டுண்டு டுண்டு டிண் டிண்டு என கொட்டி ஆட - பழைமையாகிய பேய்க் கூட்டம் டுண் டுண் டுடு டுடு டுடு டுடு டுடு டுண்டு டுண்டு டிண் டிண்டு எனப் பறைகொட்டி ஆடும்படி, வெம் சூர் கொன்ற ராவுத்தனே - கொடிய சூரனைக் கொன்ற வீரரே, கண்டு உண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை - கற்கண்டை உண்டால் ஒத்த இனிய சொல்லையுடைய மாதரது காமப் புணர்ச்சியாகிய கள்ளை, மொண்டு உண்டு அயர்கினும் - அள்ளிக் குடித்து மயக்கமுறினும், வேல் மறவேன் - உம்முடைய வேற்படையை அடியேன் மறக்கமாட்டேன்.

குறிப்பு. 1. கண்டு உண்ட – கற்கண்டை உண்டாலன்ன.

2. மெல்லியர் – மென்மையாகிய சாயலையுடையவர், பெண்கள்.

3. ஆணவமலத்தின் காரியமாகிய மாதராசை திருவருளால் நீங்கவேண்டுமென்பார், ''காமக் கலவிக் கள்ளை மொண் டுண்டயர்கினும் வேன்மறவேன்'' என்றார்.

4. வெஞ் சூர்க் கொன்ற ராவுத்தன் - ஆணவமலத்தைப் போக்கிய வீரர். இராவுத்தன் - குதிரை வீரன். திசைச்சொல்.

(தா - ம்.) மாதர்மயக்கத்தில் அழுந்தினுலும் உமது திருவருளை மறவேன் என்பதாம்.

38. பிராரத்தவாதனை நீக்குதற்குபாயம்

**நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.**

(இ - ள்.) குமரேசர் இரு தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும் தோளும் கடம்பும் - முருகக்கடவுளுடைய இரண்டு திருவடிகளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஆறு திருமுகங்களும் பன்னிருதிருக்கரங்களும் கடப்பமாலையும், எனக்கு முன்னேவந்து தோன்றிடின் - எனக்கு முன்னேவந்து தோன்றுமாயின், நாள் என் செயும் - தீயநட்சத்திரங்கள் என்னசெய்யும், வினை தான் என் செயும் - தீவினைதான் என்ன செய்யும், எனை நாடிவந்த கோள் என்செயும் - என்னை வருத்தும்படி தேடிவரும் கிரகங்கள் யாது செய்யும், (நாடிவந்த) கொடும் கூற்று என் செயும் - என்னைத் தேடிவந்த கொடிய இயமன் யாது செய்வான்.

குறிப்பு. 1. நாள் - அச்சுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்கள்.

2. இருதாள் - ஞானசத்தி, கிரியாசத்தி.

3. சிலம்பு, சதங்கை. தண்டை - பரவிந்து.

4. சண்முகம் - சிவபெருமானுக்குரிய சருவஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, சுவதந்திரத்துவம் என்னும் ஆறு குணங்களும் முருகக்கடவுளுக்கு ஆறுமுகங்களாம். ''ஏவர் தம்பாலுமின்றியெல்லை தீரமலற்குள்ள, மூவிருகுணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்ததென்ன'' (கந்தபுரா.) பிரணவமந்திரமாகிய ஓரெழுத்தும் பஞ்சாக்கரமாகிய ஐந்தெழுத்தும் ஆக ஆறெ

ழுத்துக்களும் முருகக்கடவுளுக்கு ஆறுமுகங்களாயிற்றெனி னுமாம். ''முகத்திலொன்றதா வவ்வெழுத்துடையதோர்' ''ஓமெனப்படுங் குடிலையே ஒப்பிலா முருகன் ... மாமுகத்து ளொன்றும்'' (கந்தபுராணம்)

5. தோளும் - (செய். 14. குறி. 6. பார்.)

6. கடம்பு - கருணையைக் குறிப்பது. அது திருவருள்.

(தா—ம்.) முருகக்கடவுளுடைய திருமேனி எனக்கு முன்னே தோன்றின் தீயன யாவையும் என்னை வருத்த மாட்டா.

### 39. அத்துவிதநிலை வேண்டல்.

**உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்தெனை யுன்னிலொன்று**
**விதித்தாண் டருடருங் காலமுண் டோவெற்பு நட்டுரக**
**பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல**
**மதித்தான் றிருமரு காமயி லேறிய மாணிக்கமே.**

(இ—ள்.) அம்பரம் பம்பரம் பட்டு உழல - பாற்கடலானது பம்பரம்போலச் சுழலும்படி, வெற்பு நட்டு - மந்தரமலையை மத்தாக நிறுத்தி, உரகபதி தாம்பு வாங்கி நின்று-சர்ப்பராசனுகிய வாசுகி என்னும் கயிற்றைப்பிடித்து இழுத்துநின்று, மதித்தான் மருகா - அக்கடலைக் கடைந்தவராகிய திருமாலின் மருகரே, மயில் ஏறிய மாணிக்கமே - மயில்வாகனத்தில் ஏறிவரும் மாணிக்கமே, எனை ஆண்டு - அடியேனை ஆட்கொண்டு, உதித்து ஆங்கு உழல்வதும் சாவதும் தீர்த்து - பலபிறவிகளிற் பிறந்து உலைந்துதிரிவதையும் இறப்பதையும் ஒழித்து, உன்னில் ஒன்று ஆ விதித்து - உம்மிடத்தில் ஐக்கியமாம்படி செய்து, அருள் தரும் காலம் உண்டோ - அருள்புரியும் காலமும் உளதோ.

குறிப்பு:- 1. உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்து - பிறப்பிறப்புகளுக்குக் காரணமான ஆணவமலத்தை நீக்கி என்பது. ஆணவமலத்தினுல் ஆசையும் ஆசையினுல் விருப்பு வெறுப்பும், விருப்புவெறுப்பினுற் கன்மமும், கன்மத்தினுற்

பிறப்பிறப்புகளுமுண்டாமாதலின், இங்ஙனம் கூறினர்.

2. உன்னிலொன்று விதித்து – இரண்டறக்கலக்கும் அத்துவிதநிலையைத் தந்து என்பது. ஒன்று ஆ - ஒன்று ஆக. ஆக என்னும் செயவெனெச்சம் விகாரமாகி ஆ என நின்றது.

3. வெற்பு நட்டுரக... மதித்தான் - பிரகிருதிமாயை அசுத்தமாயையினற் பிரேரிக்கப்பட, ஆன்மாக்கள் பிறவிகளுக்குக்காரணமான தங்கள் கன்மங்களை நுகர்ந்து மலபரிபாகமெய்தி ஆணவமலத்தினின்று நீங்கினர் என்பது. வெற்பு பிரகிருதிமாயையைக் குறிப்பது. உரகபதி-அசுத்த மாயை. அம்பரம் பம்பரம் பட்டுழலல் - பிறவிக்கேதுவாகிய கன்மங்கள் இன்பத்துன்பங்களாக இடைவிடாது அநுபவத்துக்குவருதல்; அம்பரம் - பிறவிகளுக்கேதுவாகிய கன்மங்களைக் குறித்து நின்றது. மதித்தல் – கடைதல், அசுத்தமாயாதத்துவங்கள் பிரகிருதிமாயாதத்துவங்களைக் காரியப்படுத்துவதினல், கன்மம் நுகரப்படுதல்.

4. மயிலேறிய மாணிக்கம் - மயிலாகிய திரோதான சத்தியைச் செலுத்தும் முருகக்கடவுள். இங்ஙனம் ஆன்மாக்களைப் பரிபக்குவப் படுத்தினும், தாம் அதனலே தொடக்குறுதிருத்தலினல் ''மாணிக்கம்'' என்றார்.

(தா—ம்.) பிறப்பிறப்புக்களைநீக்கி அத்துவிதநிலையை அடியேனுக்கு அருள்வீராக.

40. முருகக்கடவுளுடையசத்திகள் காரியப்படுத்தும் முறை

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழி றேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மன மாமயிலோன்
வேல்பட் டழிந்தன வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே.

(இ—ள்.) செந்தூர் வயல் பொழில் சேல்பட்டு அழிந்தது - திருச்செந்தூரிலுள்ள வயலைச்சார்ந்த சோலைகள் சேல்மீன்கள் தாக்கி அழிந்தன, பூங்கொடியார் மனம் –

பெண்களுடைய மனம், மா மயிலோன் தேம்கடம்பின் மால்பட்டு அழிந்தது - மகத்துவம் பொருந்திய மயில் வாகனத்தையுடைய முருகக்கடவுளுடைய வாசனைபொருந்திய கடப்பமாலையாலுண்டாகிய மயக்கத்தால் அழிந்தது, வேலையும் சூரனும் வெற்பும் வேல்பட்டு அழிந்தன – கடலும் சூரனும் கிரௌஞ்சமலையும் அவருடைய வேற்படை தாக்கி அழிந்தன, இங்கு என் தலைமேல் அயன் கையெழுத்து – இங்கே எனது சிரசின்மேற் பிரமன் எழுதிய கையெழுத்து, அவன் கால்பட்டு அழிந்தது – அவருடைய திருவடிபட்டு அழிந்தது.

குறிப்பு: 1. சேல்பட்டழிந்தது செந்தூர் வயற் பொழில்: – இதனாலே, திருச்செந்தூரிலுள்ள சோலைகள் செழிப்படைந்திருந்தன எனபதும் அச் செழிப்புக்குக் காரணம் முருகக்கடவுளின் கிரியாசத்தி என்பதும் பெறப்படும்.

2. தேங்கடம்பின் மால்பட்டழிந்தது பூங்கொடியார் மனம் – அவரது கருணைமேலீட்டால் ஆன்மாக்கள் பிரபஞ்சப்பற்றினின்றும் நீங்கின. அது அவரது இச்சாசத்தியினாலுண்டானது என்பது. கடம்பு – கருணை. கருணையே இச்சாசத்தி எனப்படுவது. பூங்கொடியார் என்பது ஆன்மாக்களைக் குறிப்பது.

3. வேல்பட்டழிந்தன வேலையும் சூரனும் வெற்பும்- அவரது ஞானசத்தியால் மல மாயை கன்மங்கள் நீங்கின என்பது. வேல் - ஞானசத்தி. வேலை - கன்மம். சூரன் - ஆணவமலம். வெற்பு - மாயை.

4. அவன் கால்பட்டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்து:- அவரது திருவடிதீக்கையினாற் பிறப்பு நீங்கிற்று என்பது.

(தா—ம்.) முருகக்கடவுளின் கிரியாசத்தி பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும். இச்சாசத்தி ஆன்மாக்கள் பிர

பஞ்சத்தில் அழுந்துவதை நீக்கும். ஞானசத்தி மும்மலங்களையும் நீக்கும். திருவடிதீக்கை பிறப்பிறப்புக்களை ஒழிக்கும்.

41. பெண்ணாசைநீங்கத் திருவடிவேண்டல்.

**பாலே யனைய மொழியார்த மின்பத்தைப் பற்றியென்றும்**
**மாலே கொண்டுய்யும் வகையறி யேன்மலர்த் தாடருவாய்**
**காலே மிகவுண்டு காலே யிலாத கணபணத்தின்**
**மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ் வேலவனே.**

(இ—ள்.) காலே மிக உண்டு - காற்றினையே மிகவும் புசித்து, காலே இலாத - கால் இல்லாதிருக்கின்ற, கண பணத்தின் மேலே துயில்கொள்ளும் — கூட்டமாகிய படங்களையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் மேலே யோக நித்திரைசெய்யும், மாலோன் மருக—திருமாலின் மருகரே, செவ்வேலவனே — செம்மையாகிய வேற்படையையுடைய கடவுளே, பாலே அனைய மொழியார் தம் இன்பத்தைப் பற்றி — பாலையே ஒத்த இனிய சொல்லையுடைய பெண்களுடைய போகவின்பத்தை விரும்பி, என்றும் மாலே கொண்டு - எந்நாளும் மயக்கத்தையே கொண்டு, உய்யும் வகை அறியேன் - அதனின்று நீங்கி ஈடேறும் வகையை அறிகின்றிலேன், மலர்த்தாள் தருவாய் - ஆதலால் நான் உய்யும்பொருட்டுத் தாமரைமலர்போலும் திருவடியைத் தந்தருளுவீராக.

**குறிப்பு.** 1. பாலேயனைய .....:- பெண்ணாசைக்குக் காரணம் ஆணவமலம். அது திருவருளால் நீங்கவேண்டுமென்பார், ''வேலவனே மலர்த்தாடருவாய்'' என்றார்.

2. கணபணத்தின் மேலே துயில்கொள்ளும் மாலோன் மருக:—பிரகிருதி மாயாதத்துவங்கள் ஒடுங்கின பிரளயகாலத்தில், விட்டுணு காத்தற்றொழிலின்றியிருக்கும் அவதரம். கணபணமுடைய ஆதிசேடன்பிரகிருதி மாயையைக் குறிப்பது.

மாலோன் மருக என்பது வள்ளிநாயகியின் தலைவர் என்பதைக் குறிக்கும். வள்ளிநாயகிக்குப் பேரின்பத்தைக் கொடுத்ததுபோல, எனது சிற்றின்ப ஆசையை நீக்கிப் பேரின்பபோகத்தைத் தந்தருளும் என்பது.

(தா—ம்.) பெண்ணாசைகொண்டு திரியும் அடியேன் உய்யும்பொருட்டு உமது திருவடியைத் தருவீராக.

## 42. முறையீடு.

**நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்கநிற்குங்**
**குணங்காட்டி யாண்ட குருதே சிகனங் குறச்சிறுமான்**
**பணங்காட்டு மல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை**
**வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே.**

(இ—ள்.) நிணம் காட்டும் கொட்டிலை விட்டு - நிணத்தையே மிகவுங் காட்டுஞ் சரீரமாகிய சிறுகுடிசையிற் புகுதலைவிட்டு, ஒரு வீடு எய்தி நிற்க - ஒப்பற்ற வீடாகிய மோக்ஷத்தை அடைந்து நிலைபெற்றிருக்க, நிற்கும் குணம் காட்டி ஆண்ட குருதேசிகன் - பிரிவின்றி நிற்கும் கருணையாகிய தமது குணத்தை வெளிப்படுத்தி என்னை ஆட்கொண்ட குருநாதரும், அம் குறச் சிறுமான் பணம் காட்டும் அல்குற்கு உருகும் குமரன் - அழகிய குறவர்குலத்துச் சிறுபெண்ணாகிய வள்ளிநாயகியுடைய பாம்பின் படத்தினை ஒத்த அல்குலுக்கு மனம் உருகுகின்ற குமாரரும் ஆகிய முருகக்கடவுளுடைய, பத அம்புயத்தை - திருவடித் தாமரைகளை, வணங்காத்தலை இது எங்கு வந்து எனக்கு இங்ஙன் வாய்த்தது - வணங்காத்தலையாகிய இது எங்கிருந்து வந்து எனக்கு இங்கே பொருந்திற்று?

குறிப்பு. 1. நிணங் காட்டும் கொட்டிலை விட்டு - பிறவி எய்தாதபடி.

2. நிற்கும் குணம்: குணம் - கருணைக்குணம். அது ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கிச் சிவப்பேற்றைக் கொ

டுக்கும்பொருட்டு முருகக்கடவுள் கொண்டகருணை, இச் சாசத்தி.

3. குறச் சிறுமான் பணங்காட்டு மல்குற் குருகும் குமரன் - வள்ளிநாயகியாருக்குத் தற்போதத்தை நீக்கிப் பேரின்பத்தைக் கொடுக்க விரும்பும் குமரன் என்றபடி. காட்டுதல் - ஒத்தல். அல்குல் - தற்போத நீக்கத்தில் நிகழும் பக்குவத்தைக் குறிப்பது.

(தா—ம்.) எனது பக்குவம் நோக்கித் திருவருள் புரிந்து பேரின்ப வீடடையும்படிசெய்த முருகக்கடவுளின் திருப்பாதத்தை வணங்குகின்றேனில்லை என்று தம்மைக் கடிந்துகொண்டவாறு.

### 43. முறையீடு.

**கவியாற் கடலடைத் தோன்மரு கோனைக் கணபணக்கட்**
**செவியாற் பணியணி கோமான் மகனைத் திறலரக்கர் [பாற்**
**புவியார்ப் பெழத்தொட்ட போர்வேன் முருகனைப் போற்றியன்**
**குவியாக் கரங்கள்வந் தெங்கே யெனக்கிங்ஙன் கூடியவே.**

(இ—ள்.) கவியால் கடல் அடைத்தோன் மருகோனை— குரங்குகளைக் கொண்டு கடலை அடைத்த திருமாலுடைய மருகரும், கணபண கட்செவியால் பணி அணி கோமான் மகனை - கூட்டமாகிய படங்களையுடைய சர்ப்பத்தினால் ஆபரணத்தை ஆக்கி அணிந்த சிவபெருமானுடைய திருக் குமாரருமாகிய, திறல் அரக்கர் புவி ஆர்ப்பு எழ - வலிமைபொருந்திய அசுரரது பூமியிலே யுத்தமுண்டாகும்படி, தொட்ட போர் வேல் முருகனை - செலுத்திய போருக் குரிய வேற்படையையுடைய முருகக்கடவுளை, அன்பால் போற்றி குவியாக் கரங்கள் - அன்போடு வணங்கிக் குவியாத கைகள், எங்கே வந்து எனக்கு இங்ஙன் கூடியவே- எங்கிருந்து வந்து இங்கே எனக்குக் கூடின?

**குறிப்பு.** 1. கவியாற் கடலடைத்தோன் மருகன்:- இராவணனைச் சங்கரிக்கும்பொருட்டு இலங்கைக்குச்

சென்ற காலத்திற் குரங்குகளைக் கொண்டு கடலில் அணை கட்டுவித்த இராமரது மருகர். மருகர் எனவே பேரின்பத்தைக் கொடுப்பவர் என்பது பெறப்படும். (செய். 43. கு. 3. பார்.)

2. கணபணக் கட்செவியாற் பணியணி கோமான் மகன் - மாயாதீதராகிய சிவபெருமானுடைய குமாரர். எனவே முருகக்கடவுளும் மாயாதீதர் என்பது பெறப்படும். கட்செவி - பாம்பு. கண்ணையே செவியாகவுங் கொண்டிருப்பதால் கட்செவி எனப்பட்டது. அது மாயையைக் குறித்து நின்றது.

3. திறலரக்கர் புவியார்ப்பெழத் தொட்ட போர் வேன் முருகன்-மலங்களைப்போக்கும் ஞானசத்தியையுடையவராகிய முருகக்கடவுள். அரக்கர் - சீவர்கள். ஆர்ப்பு - யுத்தம்.

(தா—ம்.) பேரின்பத்தைக் கொடுப்பவரும் மாயாதீதரும் மலங்களை ஒழிப்பவருமாகிய முருகக்கடவுளை அன்போடு துதித்துக் கைகூப்பித் தொழுகின்றேனில்லை எனத் தம்மைக் கடிந்துகொண்டது.

44. அந்தியகாலத்தில் திருவடிகளே உயிர்க்குத்துணை.

**தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்தியிரு**
**காலா லெழுப்பி வளைமுது கோட்டிக்கை நாற்றிநரம்**
**பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த வகம்பிரிந்தால்**
**வேலாற் கிரிதுளைத் தோனிரு தாளன்றி வேறில்லையே.**

(இ—ள்.) தோலால் சுவர் வைத்து - தோலினாற் சுவரெழுப்பி, நாலாறு காலில் சுமத்தி - இருபத்துநான்கு விலா எலும்புகளாகிய கால்களிலே தங்கவிட்டு, இரு காலால் எழுப்பி – இரண்டு கால்களாகிய தூண்களால் உயர்த்தி, வளை முதுகு ஓட்டி – முதுகெலும்பாகிய வளையை உட்புகுத்தி, கை நாற்றி - இரண்டு கைகளாகிய கைமரங்களைத் தொங்கவிட்டு, நரம்பால் ஆர்க்கை இட்டு - நரம்பு

களால் வரிச்சையிட்டு, தசைகொண்டு மேய்ந்த - தசையினுல் வேய்ந்த, அகம் பிரிந்தால் - உடம்பாகிய வீட்டை நீங்கினுல், வேலால் கிரி துளைத்தோன் இருதாள் அன்றி வேறுஇல்லை - வேற்படையாற் கிரௌஞ்சமலையைத் துளைத்தவராகிய முருகக்கடவுளுடைய இரண்டு திருவடிகளுமேயல்லாமல் ஆன்மாவுக்குத் துணை வேறில்லை.

குறிப்பு: 1. நாலாறு கால் - தசவாயுக்கள் என்றுஞ் சொல்வர்.

2. அகம் பிரிந்தால் வேலாற் கிரிதுளைத்தோ னிருதாள்-மாயாகாரியமான உடல் நீங்கினுல் மாயாமலத்தைப் போக்கும் திருவடிகளே துணை என்பது.

(தா—ம்.) உடம்பைவிட்டு உயிர் நீங்கும்பொழுது முருகக்கடவுளுடைய திருவடிகளேயன்றி அதற்கு வேறு துணை இல்லையாம்.

45. அருணிலை.

ஒருபூ தருமறி யாத்தனி விட்டி லுரையுணர்வற்
றிருபூத வீட்டி லிராமலென் றுனிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டுர சூர குலாந்தகனே.

(இ—ள்.) இரு கோடு ஒரு கை - இரண்டு கொம்புகளையும் ஒரு துதிக்கையையுமுடைய, பொரு பூதரம் உரித்து - யானையின் தோலை உரித்து, ஏகாசம் இட்ட - தமது திருமேனிக்கு உத்தரியமாகப் போர்த்த, புராந்தகற்குக் குரு - திரிபுரதகனராகிய சிவபெருமானுக்குக் குருவும், பூதவேலவன் - பரிசுத்தமாகிய வேற்படையையுடையவரும், நிட்டுர சூர குல அந்தகன் - கொடிய சூரனுடைய குலத்துக்கு முடிவுசெய்தவருமாகிய முருகக்கடவுள், பூத வீட்டில் இராமல் - பஞ்சபூத பரிணமமான சரீரவீட்டில் இருத்தலை விட்டு, ஒரு பூதரும் அறியாத் தனி வீட்டில் - சீவர்கள் ஒருவரும் அறியாத ஒப்பற்ற வீடாகிய

அருணிலையில், உரை உணர்வு அற்று இரு என்முன் - சொல்லும் தற்போதவுணர்வுமின்றி இருப்பாயாக என்று சொல்லியருளினர்.

குறிப்பு. 1. பூதர் - பூதசம்பந்தமான ஆன்மாக்கள், பாசத்தோடு கூடிய ஆன்மாக்கள். அவர் சீவர்கள் எனப் படுவர்.

2. தனிவீடு - தத்துவங்களின் செயலும் போநச்செயலும் நீங்கிய இடம். அஃது அருணிலை.

3. உரை உணர்வற்று. உரை - வாக்கு; உணர்வு - ஏகதேசவறிவு; சுட்டி அறியும் அறிவு. வாக்கு, நாதம் முதற் பிருதிவியீருகிய தத்துவங்களையும், உணர்வு, ஏக தேசவறிவாகிய போதவுணர்வையுங் குறித்துநின்றன.

4. பூதவீடு - தத்துவங்களோடு கூடிய பெத்தநிலை.

5. இரு கோட்டொருகைப் பொருபூதரம் - இச்சா ஞானக் கிரியைகளோடு கூடிய ஆணவமலம்.

6. புராந்தகர் - (செய். 3. கு. 1. பார்) புராந்தகருக்குக் குரு என்றது உபசாரம்.

7. சூரகுலாந்தகன் - மலமாதிகளைப் போக்குபவர்.

(தா—ம்.) சிவகுருவும், ஞானசத்திதரரும் மலங்களை ஒழிப்பவருமாகிய முருகக்கடவுள் கருவிச்சேட்டையும் தற் போதவுணர்வுமின்றிச் சும்மாவிரு என்று உபதேசித்தருளினர்.

## 46. அத்துவிதநிலை.

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற்
றேயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே.

(இ—ள்.) சேய் ஆன வேல் கந்தனே - குழந்தையாகிய வேற்படையைத் தரித்த கந்தசுவாமியே, செந்திலாய் -

திருச்செந்திலேயுடையவரே, சித்ர மாதர் அல்குல் தோயா உருகிப் பருகிப் பெருகித் துவளும் – அழகிய பெண்களது நிதம்பத்தடத்தில் மூழ்கி மனமுருகிச் சிற்றின்பபோகத்தை அநுபவித்து ஆசைமிகுந்து சோர்கின்ற, மாயாவினேதை இந்த மனேதுக்கமானது மாய்வதற்கு – மாயையின் பொழுதுபோக்காகிய இந்த மனத்துயரம் நீங்கும்பொருட்டு, நீ ஆன ஞான வினேதந்தனே - யான் நீ ஆகும் ஞானத்தின் செயலாகிய அத்துவிதநிலேயை, நீ என்று அருள்வாய் – தேவரீர் அடியேனுக்கு எந்நாள் தந்தருளுவீர்.

குறிப்பு. நீயான ஞான வினேதம் - யான் எனது என்னுஞ் செருக்கற்று ஆன்மா சிவத்தோடு இரண்டறக் கலந்து நிற்கும் அத்துவிதநிலே. இந்நிலே திருவருளின் செயலாற் பெறப்படுதலின், ஞானவினேதம் என்ருர். ஞானவினேதம் - பொழுதுபோக்கு.

(தா—ம்.) பெண்ணுசை நீங்கும்பொருட்டு அடியேன் அத்துவித நிலேயை அடைவது எக்காலம்.

## 47. பேராநந்தநிலே

**பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்**
**தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்**
**புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்**
**தத்திக் கரைபுர ளும்பர மாநந்த சாகரத்தே.**

(இ—ள்.) செயல் மாண்டு அடங்க – செயலற்று அடங்க, புத்திக்கமலத்து உருகிப் பெருகி - எனது அறிவாகிய தாமரையினின்றும் உருகிப் பெருகி, புவனம் எற்றித் தத்தி – புவனங்களேத் தாக்கிப் பாய்ந்து, கரை புரளும் – கரைகடந்து ஓடுகின்ற, பரம ஆநந்த சாகரத்தே - பேராநந்தக் கடலிலே, பத்தித் திருமுகம் ஆறுடன் - வரிசையாகிய திருமுகங்கள் ஆறுடன், பன்னிரு தோள்களுமாய் - பன்னிரண்டு புயங்களேயுடையதுமாய், தித்தித்து இருக்கும் அமுது கண்டேன் - அன்பருள்ளத்

திலே இனித்திருக்கும் அமிர்தமாகிய முருகக்கடவுளை யான் அறிந்து அநுபவித்தேன்.

குறிப்பு. 1. திருமுகமாறு - (செய். 38. கு 4. பார்.)

2. பன்னிருதோள் - (செய். 14. கு. 6. பார்.)

3. செயல் மாண்டடங்கல் - தனக்கென ஒரு செயலும் போதநிகழ்ச்சியுமின்றித் திருவருளைத் தாரகமாகக் கொண்டு அதில் அடங்கி நிற்றல்.

4. புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித் தத்திக் கரைபுரளும் பரமாநந்தம்:— தத்துவங்களுக்கும் புவனங்களுக்கும் அப்பாற்பட்ட சுத்தநிலையிலே ஆன்மா அறிவு வியாபகமெய்த அவ்விடத்துத் தோன்றும் பேராநந்தத்தில் அவ்வறிவு மூழ்கி அவ்வாநந்தத்தை அநுபவித்தது என்பது பொருள்.

(தா—ம்.) சுத்த அருணிலையில் எனது அறிவு வியாபகமெய்திப் பேரின்பத்தை அநுபவித்தது.

## 48. முத்தி வேண்டல்.

**புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டியன்பாய்**
**முத்தியை வாங்க வறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்**
**சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்**
**குத்திய காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே.**

(இ—ள்.) குவடு தவிடுபடக் குத்திய காங்கேயனே — கிரௌஞ்சமலையானது பொடிபடும்படி அதனை வேற்படையாற் குத்திய காங்கேயக் கடவுளே, புத்தியை வாங்கி நின் பாத அம்புயத்தில் அன்பாய் புகட்டி - பொறிவழியே செல்லுகின்ற என்மனத்தை வாங்கித் தடுத்து உனது பாத தாமரையில் அன்போடு புகவிட்டு, முத்தியை வாங்க அறிகின்றிலேன் - முத்தியைப் பெற்றுக்கொள்ள எண்ணுகின்றேனில்லை, முது சூர் நடுங்கச் சத்தியை வாங்கத் தரமோ - முதிர்ந்த சூரன் நடுங்கும்படி வேற்படையாகிய

உமது சத்தியை எடுக்க அவன் பக்குவமுடையனோ? அவன் பக்குவமுடையனாய் இருந்ததனால் அங்ஙனம் செய்தீர். ஆயின், வினையேற்கு என் குறித்தனை - தீவினையேனாகிய அடியேனை ஆட்கொள்ளுவதற்கு யாது நினைந்தருளுகின்றீர்.

குறிப்பு. 1. சூர் நடுங்கச் சத்தியை வாங்குதல் - வேற்படையாற் சூரனதுமலம் வலிகுன்றச்செய்தல்.

2. குவடு தவிடுபடக் குத்துதல் - மாயாமலத்தை ஒழித்தல். காங்கேயன் - கங்கையின் மகன்.

3. வினையேன் - கன்மங்களையுடைய அடியேன்.

(தா—ம்.) முருகக்கடவுளே! மல மாயை கன்மங்களை நீக்கி அடியேனுக்கு முத்தியைத் தந்தருளும்.

49. அடியார் மகிமை.

**சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் றொண்டர்குழாஞ்**
**சாரிற் கதியன்றி வேறிலை காண்டண்டு தாவடிபோய்த்**
**தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்**
**நீரிற் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே.**

(இ—ள்.) தண்டு தாவடி போய் – சேனையோடு போருக்குச் சென்று, தேரில் கரியில் பரியில் திரிபுவர் செல்வம் எல்லாம் - தேரிலும் யானையிலும் குதிரையிலும் ஏறித் திரிபவராகிய அரசருடைய செல்வம் முழுவதும், நீரில் பொறி என்று அறியாத பாவி நெடு நெஞ்சமே - நீர்மேல் எழுதும் எழுத்தை ஒக்கும் என்று உணராத பாவியாகிய பேரவாவுடைய மனமே, சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர் குழாம் சாரின் – சூரன்மீதும் கிரௌஞ்ச மலைமீதும் ஒளியையுடைய வேற்படையைச் செலுத்திய முருகக்கடவுளுடைய அடியார்கூட்டத்தை அடைவாயாயின், கதி அன்றி வேறு இலை காண் – அங்கே நாம் அடையும்படியிருக்கும் முத்தியன்றி வேறுபொருளில்லை என அறிவாயாக.

**குறிப்பு.** தண்டம் என்பது தண்டு என விகாரமாயிற்று.

(தா—ம்,) மனமே! மன்னர் வாழ்வும் நிலையற்றது. முருகக்கடவுளது அடியாரைக்கூடின் நிலைபெறுன பேரின்ப வாழ்வு கைகூடும்.

50. அந்தியகாலத்திலே தெரிசனம் வேண்டல்.

**படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்திறுற்**
**பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று**
**நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூர னடுங்கவெற்பை**
**இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே.**

*(இ—ள்.)* பெரும் பாம்பில் நின்று நடிக்கும் பிரான் மருகா - காளியன் என்னும் பெரும் பாம்பின்மேலே நின்று நடித்த திருமாலுக்கு மருகரே, கொடும் சூரன் நடுங்க வெற்பை இடிக்கும் கலாபத் தனிமயில் ஏறும் இராவுத்தனே - கொடிய சூரனுனவன் நடுங்கும்படி கிரௌஞ்ச மலையைப் பொடியாக்கிய தோகையையுடைய ஒப்பற்ற மயிலின்மேல் ஏறுகின்ற வீரரே, படிக்கும் திருப்புகழ் போற்றுவன் - அன்பர்கள் படிக்கும் உம்முடைய திருப்புகழை அடியேனும் படித்துத் துதிப்பேன், கூற்றுவன் பாசத்திறுல் பிடிக்கும்பொழுது வந்து அஞ்சல் என்பாய் - இயமனுனவன் தனது பாசக்கயிற்றிறுற் கட்டிப்பிடிக்கும் நேரத்தில் தேவரீர் எனக்கெதிரில் வந்து அஞ்சாதே என்று சொல்லியருளுவீராக.

**குறிப்பு.** 1. பெரும் பாம்பினின்று நடிக்கும் பிரான்- பிரகிருதிமாயையைத் தொழிற்படுத்தும் விட்டுணு. பெரும் பாம்பு - பிரகிருதிமாயையைக் குறிப்பது.

2. சூரனடுங்க - (செய். 48. கு. 1. பார்.)

3. இடிக்கும் என்னும் பெயரெச்சம் இராவுத்தன் என்னும் சொல்லின் விகுதியோடு முடிந்தது.

4. இரௌத்திரன் என்னும் வடசொல் ராவுத்தன் என வந்தது என்பார். இரௌத்திரன் - கடுமையுடைய வன்.

(தா - ம்.) முருகக்கடவுளே! இயமன் பாசத்தினுற் பிணிக்கும் பொழுது தேவரீர் வந்து அஞ்சாதே என்றரு ளக்கடவீர்.

### 51. அன்னதானத்தின் பேறு

மலையாறு கூறெழ வேல்வாங்கி ஞனை வணங்கியன்பின்
நிலையான மாதவஞ் செய்குமி னேநும்மை நேடிவ ருந்
தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீர்
இலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே.

(இ—ள்.) மலை ஆறு கூறு எழ வேல் வாங்கினுனை - கிரௌஞ்சமலை ஆறுகூறுபட வேற்படையைச் செலுத்திய முருகக்கடவுளை, அன்பின் வணங்கி – அன்போடு வணங்கி, ஏற்றவர்க்கு - உம்மிடத்து வந்து யாசித்தவர்க்கு, வெந் தது இலையாயினும் ஏதாயினும் பகிர்ந்து - உம்முடைய உணவுக்காகச் சமைக்கப்பட்ட இலைக்கறியையாயினும் சமைக்கப்பட்ட வேறெந்தப் பொருளையாயினும் பங்கிட் டுக் கொடுத்து, நிலையான மாதவம் செய்குமின் - நிலை பேறுன பெரிய தவத்தைச் செய்யுங்கள், தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையும் உம்மை நேடி வரும் கண்டீர் - இது இறந்தபின் நீர் செல்லும் தொலை யாத நெடுவழிக்குக் கட்டுச்சோறும் இயைந்த துணையு மாக உம்மைத் தேடிவரும் என அறிவீராக.

குறிப்பு 1. ஆறு கூறெழ - வேலினது ஆறுமுகத்தா லுங் கூறுபட்டமை தோன்ற "ஆறு கூறெழ" என்ருர்.

2. நிலையான மாதவம் - இல்லையாயினும் வெந்ததே தாயினும் பகிர்தல். அது வீண்போகாதென்பர் "நிலை யான மாதவம்" என்ருர்.

3. செய்குமினே. ஒ - அசைநிலை.

4. தொலையா வழி - நீங்குதற்கரிய பிறவிகள்.

5. பொதி சோறு முற்ற துணையும் - செல்லும் வழிகளிற் புண்ணியமாகத் தொடர்ந்து திருவருள்கூடும் என்பது.

(தா—ம்.) முருகக்கடவுளை வணங்கி அன்போடும் இரப்போருக்கு யாதாவது கொடுங்கள். இத்தவம் உமது உயிர் செல்லும் கடைவழிக்குத் துணையாயிருக்கும்.

52. திருப்புகழ்பாட வரம்வேண்டல்.

சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீபணி பாசசங் க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே.

(இ—ள்.) பணி பாச சங்கிராம — இழிவான பாசத்தோடு போர் செய்பவரே, பணா மகுட நிகர அட்சம பட்ச பட்சி துரங்க - படத்தோடு கூடிய முடிக்கூட்டங்களையுடைய பாம்பை உண்ணும் பறவையாகிய மயிலை வாகனமாக உடையவரே, நிருப - இறைவரே, குமரா - குமாரரே, குக - குகனே, ராட்சச பட்ச - அசுரரை அழித்தவரே, விட்சோப தீர - கலக்கமில்லாத தீரரே, குண துங்கனே - குணத்தினுன் மேன்மையுடையவரே, சிகர அத்திரி கூறிட்ட வேலும் செம் சேவலும் - சிகரங்களையுடைய கிரௌஞ்சமலையைக் கூறுபடுத்திய வேற்படையையும் சிவந்த கோழிக் கொடியையும், செந்தமிழால் பகர் ஆர்வம் ஈ - செந்தமிழ்ப் பாக்களாற் புகழ்ந்து பாடற்குரிய விருப்பத்தைத் தந்தருளவேண்டும்.

குறிப்பு. 1. அத்திரி - மலை.

2. பணி - பணிந்த, தாழ்ந்த, இழிந்த. சங்கிராமம் - யுத்தம்.

3. நிகரம் - கூட்டம்.

4. அட்சமம் - பொறுமையின்மை, கோபம். இங்கே கோபத்தையுடைய பாம்பை உணர்த்திற்று. சமம் - பொறுமை. அ - இன்மை.

5. துரங்கம் - குதிரை. பட்சி துரங்கம் - பறவையாகிய குதிரை.

6. குகன் - காப்பவன். உயிர்களாகிய குகைகள் தோறும் இருத்தலாற் குகன் எனப்படுவர் என்பர்.

7. விட்சோபம் - கலக்கமின்மை. சோபம் - கலக்கம். வி - எதிர்மறை.

8. குண துங்கன் - அறுகுணமாட்சிமையுடையவர். துங்கன் - உயர்ந்தோன்.

(தா—ம்.) முருகக்கடவுளே! உமது புகழைப்பாடுதற்குரிய விருப்பத்தைத் தந்தருளும்.

53. அறஞ்செய்ய வேண்டும்.

**வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினுற்**
**பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்**
**றேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து**
**வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே.**

(இ—ள்.) வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை - குறமகளாகிய வள்ளிநாயகியுடைய தனங்களை இச்சித்த குமாரக்கடவுளை, மெய்அன்பினுல் கசிந்து பாடி - மெய்யன்போடு மனங்கசிந்து பாடி, உள்ளபோதே கொடாதவர் - பொருளுள்ளபோதே இரப்போருக்குக் கொடாதவர், பாதகத்தால் தேடிப்புதைத்து —பாவவழியாற் பொருளைத் தேடித் தாமும் அநுபவியாது புதைத்துவைத்து, திருட்டில் கொடுத்துத் திகைத்து – கள்வரது திருட்டுவழியிற் போகவிட்டுத் திகைத்து, இளைத்து வாடிக் கிலேசித்து - அதனுலே உடல் மெலிந்து வாடி மனக்கிலேசமுற்று, வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவர் – தம்முடைய வாழ்நாளை வீணிலே கழிப்பவராவர்.

குறிப்பு. 1. வேடிச்சி கொங்கை விரும்புங் குமரன் - வள்ளிநாயகியின் பக்குவத்தை விரும்பிய குமரன். கொங்கை - பக்குவமுதிர்ச்சியைக் குறிப்பது.

2. ஈசுரார்ப்பணம் செய்து தருமம் செய்யவேண்டும் என்பதும், செல்வம் நிலையற்றதாதலால் உள்ளபோதே கொடுக்கவேண்டும் என்பதும், அங்ஙனம் தருமம் செய்யின், அத்தருமத்தால் ஆன்மா பக்குவமெய்தித் திருவருளைப் பெறும் என்பதும், தீயவழியாற் சம்பாதித்த பொருள் நல்வழியிற் சென்று பயன்படாது தீயரிடத்தே செல்லும் என்பதும், தருமஞ்செய்யாதவர் திருவருளைப் பெறாது வாழ்நாளை வீணாகக் கழிப்பவர் என்பதும் இச்செய்யுளிற் கூறியவாறு காண்க.

(தா—ம்.) பொருளுள்ளபோதே தருமஞ்செய்யவேண்டும். அங்ஙனஞ் செய்யாதவர் தமது வாழ்நாளை வீணாகக் கழிப்பவராவர்.

54. முறையீடு.

**சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றித் தளர்ந்தவர்க்கொன்**
**றீகைக் கெனைவிதித் தாயிலை யேயிலங் காபுரிக்குப்**
**போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கட றீக்கொளுந்த**
**வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே.**

(இ—ள்.) இலங்காபுரிக்குப் போகைக்கு நீ வழி காட்டு என்று போய் - இலங்கை நகருக்குப் போவதற்கு நீ வழிகாட்டக்கடவை என்று சென்று, கடல் தீக் கொளுந்த - (வழிகாட்டுவதற்கு வராதிருந்த சமுத்திர ராசனாகிய வருணன்மீது கோபித்து) சமுத்திரம் நெருப்புப் பற்றி எரியும்படி, வாகைச்சிலை வளைத்தோன் மருகா - வெற்றியையுடைய வில்லை வளைத்தவராகிய திருமாலுக்கு மருகரே, மயில் வாகனனே - மயில்வாகனத்தையுடையவரே, சாகைக்கும் மீண்டு பிறக்கைக்கும் அன்றி - இறத்தற்கும் திரும்பிப் பிறத்தற்கும் படைத்தனையன்றி, தளர்ந்

தவர்க்கு ஒன்று ஈகைக்கு எனை விதித்தாய் இலையே - வறுமையாலே தளர்வடைந்தோருக்கு ஒரு பொருளைக் கொடுத்தற்கு என்னைச் சிருட்டித்திரில்லையே.

(தா—ம்.) தருமஞ்செய்தற்கேற்ற பிறவியை நான் அடையவில்லையே என முறையிட்டது.

## 55. அருள் பெறுதவர்நிலை.

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மாநந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

(இ—ள்.) தொழும்பு செய்யார் - குருலிங்க சங்கமங்களுக்குத் தொண்டு செய்யார், நினைப்பும் மறப்பும் அறார் - சகல கேவலங்களும் நீங்கப்பெறார், ஆங்காரமும் அடங்கார் ஒடுங்கார் - அச் சகல கேவலங்களன்றி யான் எனது என்னும் செருக்கும் அடங்கித் திருவருளில் ஒடுங்கார், தினைப்போதளவும் ஓங்காரத்து உள் ஒளிக்கு உள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார் - தினையளவு நேரத்துக்கேனும் பிரணவத்தின் உள்ளொளிக்குள்ளே முருகக்கடவுளுடைய திருவுருவத்தைக்கண்டு உறங்குதலையுஞ் செய்யார், பரமாநந்தத்தே தேங்கார் - பேராநந்தத்திலே அமிழ்ந்தி நிறைதலையுஞ்செய்யார், யமதூதருக்கு என் செய்வார் - இவர் இறுதிக்காலத்தில் இயமதூதரால் வரும் துன்பத்துக்கு என்னபரிகாரஞ் செய்து கொள்வர்?

**குறிப்பு.** 1. ஆங்காரமு மடங்கா ரொடுங்கார்: ஆங்காரமடங்கல் - தற்போதங்கெடல். ஒடுங்கல் - திருவருள் வியாபகத்துள் அடங்கி நிற்றல், இறைபணிநிற்றல்.

2. நினைப்பு மறப்பு - சகலகேவலங்கள், நினைப்பாய் நின்ற முப்பத்தாறு தத்துவங்களும் மறப்பாய்நின்ற ஆணவ மலமும்.

3. ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு தூங்கார் - பராசத்தியிலடங்கிச் சிவதரிசனஞ்செய்து சிவத்தோடு ஏகமாய் நில்லாதவர். ஓங்காரம் - திரோ தானசத்தி. உள்ளொளி - பராசத்தி. முருகன் உருவங் கண்டு தூங்குதல் – முருகக்கடவுளாகிய சிவத்தைத் தெரி சனஞ்செய்து அச்சிவத்தோடு ஏகனாய்நிற்றல்.

(தா—ம்.) தொழும்புசெய்தல் முதலியன இல்லாத வர் இயமதூதருக்கு அஞ்சுவர் என்பதாம்.

56. திருப்புகழையே படிக்கவேண்டும்.

**கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி**
**இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்**
**குழியுந் துயரும் விடாய்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்**
**வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.**

(இ—ள்.) கிழியும்படி அடல் குன்று எறிந்தோன் கவி கேட்டு உருகி - பிளவுபடும்படி வலிய கிரௌஞ்சமலையை வேலால் எறிந்த முருகக்கடவுளுடைய உயர்வாகிய கவி களைக் கற்று மனமுருகியிருப்பதன்றி, இழியும் கவி கற் றிடாது இருப்பீர் - இழிந்த கவிகளைக் கல்லாதிருங்கள், விடாய்பட கூற்றுவனூர்க்குச் செல்லும் வழியும் – நீர்த் தாகமும் வந்து வருத்த இயமபுரத்துக்கு இளைத்து இளைத் துச் செல்லும் வழியின் கடுமையையும், துயரும் - அங் ஙனம் செல்லும்பொழுது உண்டாகும் துயரத்தின் தன்மை யினையும், எரிவாய் நரகக் குழியும் - பின்னர் இயமதூதர் கொண்டு சென்று வீழ்த்தும் அக்கினியைவாய்ந்த நரகக் குழியின் தன்மையினையும், துயரும் - அங்கே அநுபவிக்குந் துன்பத்தின் தன்மையினையும், பகரீர் பகரீர் - நீங்கள் சொல்லுங்கள் சொல்லுங்கள்.

குறிப்பு. கேட்டல்:— இங்கே கற்றல்.

(தா—ம்.) முருகக்கடவுள்மீது பாடிய பாடல்களை யேயன்றி மற்றைய இழிவான பாடல்களைப் படியாதிருக்

கக்கடவீர். அதனை மறந்தவர்க்கு நரகவேதனையைப்பற்றி வற்புறுத்திச் சொல்லுங்கள்.

### 57. அன்னதானம் செய்யவேண்டும்.

**பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்**
**தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்**
**இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்**
**ஒருபிடி சாம்பருங் காணுது மாய வுடம்பிதுவே.**

(இ—ள்.) இருவினையோம் இறந்தால் - இருவினைப் பாசமுடையேமாகிய நாம் இவ்வுடம்பைப் பிரிந்து நீங்கிஞல், மாயம் உடம்பு இது - பொய்யாகிய இவ்வுடம்பு, ஒருபிடி சாம்பரும் காணுது - தகிக்கப்பட்டு ஒருபிடி சாம்பராவது காணப்படமாட்டாது, ஆகையால், பொருபிடியும் களிறும் விளையாடும் - தம்முள் ஒத்த பெண்யானையும் ஆண்யானையும் விளையாடுதற்கிடமாகிய, புனச் சிறுமான் தருபிடி காவல - புனத்தின்கணுள்ள சிறிய மான் பெற்ற பெண் யானைபோலும் வள்ளிநாயகியாருடைய தலைவரே, சண்முகவா - அறுமுகக்கடவுளே, எனச்சாற்றி - என்று வாழ்த்தி, நித்தம் பிடி சோறு கொண்டு இட்டு உண்டு இரு - நாடோறும் உண்ணுஞ்சோற்றில் ஒருபிடியாவது எடுத்து இரப்போர்க்குக் கொடுத்துப் பின்பு நீயும் புசித்து இருப்பாயாக.

குறிப்பு. 1. புனச்சிறுமான் தருபிடி - வள்ளிமலைச் சாரலின்கண் தவஞ்செய்துகொண்டிருந்த சிவமுனிவர் என்னும் மேலோர் ஒருவர் அங்கே வந்த பிணைமான் ஒன்றை இச்சித்துப்பார்த்தமையால் வள்ளிநாயகியார் அம்மான்வயிற்றில் கருப்பமாகி உதித்தனர் என்று புராணம் கூறும். மான் - பிரகிருதிமாயை. சிவமுனிவர் - பிரகிருதியைப் பிரேரிக்குஞ் சீகண்டருத்திரர். வள்ளிநாயகியார் - பக்குவான்மா.

2. இருவினையோம் - நல்வினை தீவினைகளின் பயனுகிய இன்பத்துன்பங்களை அனுபவிக்கும் நாம்.

3. ஒருவருக்கும் கொடாது ஊட்டி வளர்த்தாலும் இவ்வுடம்பு நிலை பெறுதாதலால், இருவினையோ மிறந்தால் ஒருபிடி சாம்பரும் காணுது மாயவுடம்பிதுவே என்றுர்.

*(தா—ம்.)* இவ்வுடம்பு நிலையற்றது. ஆகையால் நீங்கள் மாத்திரம் உண்டு உங்கள் உடலைமாத்திரம் பேணுமல், அறுமுகக்கடவுளை வாழ்த்தி நித்தமும் வறியோருக்கும் கொடுங்கள் என்பதாம்.

58. முருகக்கடவுள் பரமகுரு.

**நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி**
**முற்றுத் தனத்திற் கினிய பிரானிக்கு முல்லையுடன்**
**பற்றுக் கையும்வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற்**
**செற்றூர்க் கினியவன் றேவேந்த்ர லோக சிகாமணியே.**

*(இ—ள்.)* நெற்றுப் பசும் கதிர் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி - நெற்றுகாத பசுமையாகிய கதிர்களையுடைய செந்தினையைக் காத்த நீலநிறத்தையுடைய வள்ளி நாயகியாரின், முற்றுத் தனத்திற்கு இனியபிரான் - முதிராத தனங்களுக்கு இனிய தலைவரும், இக்கு முல்லையுடன் பற்று ஆக்கையும் வெந்து சங்க்ராம வேளும்பட - கருப்புவில்லோடும் முல்லைமலர்ப்பாணத்தோடும் பற்றிய உடம்பும் வெந்து போர்புரிந்த மன்மதனும் இறக்க, விழியால் செற்றூர்க்கு இனியபிரான் - நெற்றிக்கண்ணினுல் அழித்த சிவபெருமானுக்கு இனியவரும் யாவரெனின், தேவேந்த்ரலோக சிகாமணியே - தேவேந்திரலோகத்திலுள்ளார்க்கு முடிமணிபோல இருப்பவராகிய முருகக்கடவுளேயாம்.

**குறிப்பு.** 1. நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் - பிரபஞ்சவிடயங்கள். செவ்வேனல் - பிரபஞ்சம். பசுங்கதிர் - விடயங்கள்.

2. வள்ளி முற்றுத் தனத்திற் கினிய பிரான் - வள்ளி நாயகியாரின் பக்குவமுதிர்ச்சியை விரும்பும் முருகக்கடவுள்.

3. பற்றுக்கை: பற்று ஆக்கை - பற்றி, உடம்பு.

4. சிகாமணி - சிரேட்டர்.

5. முல்லை - இனம்பற்றித் தாமரை மா அசோகு நீலம் என்பவைகளாகிய மற்றைய நான்கும் கொள்ளப் படும். இவை மன்மதனது பஞ்சபாணம் எனப்படுவன. இவற்றுள், தாமரைமலருக்கு நினைப்பிப்பதும், மாவின் மலருக்கு பசலையுண்டாக்குவதும், அசோகமலருக்கு உண வைவெறுக்கச் செய்வதும், முல்லைமலருக்குக் கிடையாய்க் கிடக்கச்செய்வதும், நீலமலருக்குக் கொல்லுவதும் குணங் களாம். இவை எய்யப்படும் இடங்கள் முறையே நெஞ்சு கொங்கை விழி சிரம் அல்குல் என்பவைகளாம். ''இக்கு முல்லையுடன் பற்றுக்கையும் வெந்து சங்க்ராம வேளும்பட'- ஆணவமலமும் அதன் காரியங்களும் ஒழிய என்பது. மன் மதன் - வேட்கையை உண்டாக்கும் ஆணவமலம்.

6. நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீல வள்ளி முற்றுத் தனத்திற் கினியபிரான் என்பது ஆன் மாக்களுக்குப் பிரபஞ்சப்பற்று நீங்கி மலபரிபாகம் வரு தலை விரும்பும் கடவுள் என்பதையும், இக்கு முல்லையுடன் பற்றுக்கையும் வெந்து சங்க்ராம வேளும் பட விழியாற் செற்றூர்க் கினியவன் என்பது மலத்தை ஒழிக்கும் சிவ பிரானுக்கு இனியவர் என்பதையும், தேவேந்திரலோக சிகாமணி என்பது பக்குவமெய்திய ஆன்மாக்களுக்குக் குருநாதர் என்பதையுங் குறித்துநின்றன.

(தா—ம்.) வள்ளிநாயகியாரின் மலபரிபாகத்தை விரும்பினவரும் சிவபெருமானுடைய திருக்குமாரரும் தேவ குருவாகிய முருகக்கடவுளேயாவர்.

59. அறத்தின் பேறு.

**பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ**
**வெங்கா யினும்வரு மேற்பவர்க் கிட்ட திடாமல்வைத்த**
**வங்கா ரமுமுங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்**
**சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே.**

(இ—ள்.) ஏற்பவர்க்கு இட்டது - யாசகர்க்குக் கொடுத்தது, பொங்கு ஆரவேலையில் - மேலெழுகின்ற முத்துக்களையுடைய கடலின் மீது, வேலைவிட்டோன் அருள் போல் — வேற்படையைச் செலுத்தி அதனை வற்றும்படி செய்த முருகக்கடவுளின் திருவருள்போல, உதவ எங்கு ஆயினும் வரும் - உமக்கு உதவிசெய்தற்கு எவ்விடத்தாவது வரும், இடாமல் வைத்த வங்காரமும் உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும் - கொடாமல் இருப்பில் வைத்த பொன்னும் உங்களுடைய அழகிய வீடும் மாதரும், உயிர் தனி போம் அவ்வழிக்கு - உயிர் தனிமையாகச் செல்லும் அவ்வழிக்கு, சங்காதமோ கெடுவீர் - துணையாகக்கூடிவருமோ சொல்வீர், கெடுவீர் உலகத்தாரே.

குறிப்பு. 1. பொங்கார வேலையில் வேலைவிட்டோனருள் போலுதவவெங்காயினும் வரும் - தத்துவங்களெல்லாம் கழன்றவிடத்து ஆன்மாவுக்குத் திருவருளே தாரகமாயிருப்பதுபோல, பொன், மனை முதலியவற்றை விட்டுப்போகுந் தனிவழிக்கு இப்பிறப்பிற் செய்யும் தருமமே தாரகமாயிருக்கும் என்பது. வேலையில் வேலை விடுதல் - கன்மங்களை ஞானசத்தியால் அழித்தல்.

2. சங்காதம் - துணை, நட்பு, கூட்டம்.

3. கெடுவீர் என்பது இரக்கப்பொருள்தரும் ஓரிடைச் சொல்.

(தா—ம்.) ஏற்பவர்க்கிட்டது சிவபுண்ணியமாகிச் சத்தினிபாதத்தை உண்டாக்கும். இடாமல் வைத்த பொன் முதலியன அங்ஙனஞ் செய்யா.

60. பிராரத்தவினை தாக்காமைக்குபாயம்.

**சிந்திக்கி லேனின்று சேவிக்கி லேன்றண்டைச் சிற்றடியை**
**வந்திக்கி லேனொன்றும் வாழ்த்துகி லேன்மயில் வாகனனைச்**
**சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கி லேனுண்மை சாதிக்கிலேன்**
**புந்திக்கி லேசமுங் காயக்கி லேசமும் போக்குதற்கே.**

*(இ—ள்.)* புந்திக் கிலேசமும் காயக்கிலேசமும் போக்குதற்கு - மனத்துயரையும் தேகத்துயரையும் ஒழித்தற்பொருட்டு, மயில்வாகனனைச் சந்திக்கிலேன் - மயில்வாகனத்தையுடையவராகிய முருகக்கடவுளை ஆலயங்களிற் சென்று தரிசனஞ் செய்கின்றிலேன், தண்டைச் சிற்றடியை நின்று சிந்திக்கிலேன் சேவிக்கிலேன் வந்திக்கிலேன் ஒன்றும் வாழ்த்துகிலேன் - தண்டை அணிந்த அவரது சிறிய திருவடிகளை மனத்தை ஒருப்படுத்திநின்று தியானிக்கின்றிலேன், வணங்குகின்றிலேன், புகழ்கின்றிலேன், சிறிதும் துதிக்கின்றிலேன், பொய்யை நிந்திக்கிலேன் - பொய்ப்பொருளாகிய பிரபஞ்சத்தை இகழ்கின்றிலேன், உண்மை சாதிக்கிலேன் - உண்மைப்பொருளாகிய முருகக்கடவுளைச் சாதனங்களைச் செய்து அறிகின்றிலேன்.

குறிப்பு. *1.* பொய்யை நிந்தித்தல் - பிரபஞ்சத்தை நிலையில்லாத பொய்ப்பொருளெனக்கண்டு அதனிடத்துப் பற்றின்றி இருத்தல்.

*2.* உண்மை சாதித்தல் - முருகக்கடவுள் உண்மைப் பொருளெனத்தெளிந்து அவரைப் பற்றிநிற்றல்.

(தா—ம்.) மனக்கிலேசம் முதலிய பிராரத்தவினை தாக்காதபடி முருகக்கடவுளை வணங்கவேண்டும்.

## 61. அத்துவிதநிலை.

**வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச் செற்ற
புரையற்ற வேலவன் போதித் தவாபஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.**

*(இ—ள்.)* பஞ்சபூதமும் அற்று - பஞ்சபூதங்கள் முதலிய தத்துவங்களின் செயலுமற்று, உரை அற்று - வாக்கின் செயலுமற்று, உணர்வு அற்று — மனத்தின் செயலுமற்று, உடல் அற்று - காயத்தின் செயலுமற்று, உயிர் அற்று - ஆன்மபோதமுங் கெட்டு, உபாயம் அற்று - சித்தி

சாதனமுமின்றி, இருள் அற்று - யான் என்னும் மலவாசனையுங் கெட்டு, எனது அற்று – எனது என்னும் மலவாசனையுங் கெட்டு, கரை அற்று இருக்கும் அக்காட்சி அது - எல்லையில்லாது எங்கும் வியாபகமாய் இருக்கும் அந்தத் தெளிவுக்காட்சியை, வரை அற்று – கிரௌஞ்ச மலை அழியவும், அவுணர் சிரம் அற்று - அசுரர் தலைகள் அறவும், வாரிதி வற்ற - கடல் சுவறவும், செற்ற - வெகுண்ட, புரை அற்ற வேலவன் போதித்தவா – ஒப்பற்ற வேற்படையையுடையவராகிய முருகக்கடவுள் எனக்கு அறிவுறுத்தியவாறு என்ன வியப்பாயிருக்கிறது.

குறிப்பு. 1. வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச் செற்ற வேல் - மாயையையும் ஆன்மாக்களைப் பொருந்திய ஆணவமலத்தையும் கன்மங்களையும் நீக்கிய வேற்படை. அவுணர் என்பது ஆன்மாக்களையும், சிரம் என்பது மூலமலத்தையும் குறித்துநின்றன.

2. பஞ்சபூதமும் - பூதமும் என்ற உம்மையால் மற்றைய தத்துவங்களும் வருவிக்கப்பட்டன.

3. உபாயம் —சித்தியடையும்படி செய்யும் சாதனங்கள்.

4. இருளற் றெனை தற்று - யான் எனது எனப் பகுத்துக்காணும் மயக்கவுணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை. இருள் - மயக்கம்.

5. காட்சி - யான் என ஒருமுதல் காணப்படாது முதல்வனது திருவடிவியாபகத்துள் அடங்கி அம்முதல்வனே முழுதுமாய்க் காணப்படும் தெளிவுக்காட்சி. தூல அறிவாகிய உயிரும் சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்துநிற்கும் நிலை.

(தா—ம்.) முருகக்கடவுள் அத்துவிதநிலையை எனக்கு உணர்த்திய முறைமை என்ன வியப்பாயிருக்கிறது.

62. முருகக்கடவுள் ஞானகுரு.

**ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை யகிலமுண்ட**
**மாலுக் கணிகலம் தண்ணந் துழாய்மயி லேறுமையன்**
**காலுக் கணிகலம் வானோர் முடியுங் கடம்புங்கையில்**
**வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனு மேருவுமே.**

(இ—ள்.) ஆல் உக்கு அணிகலம் வெண் தலைமாலையே- கல்லாலின் நிழலில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுக்கு ஆபரணமாவது வெண்மையான கபாலங்களாலாய மாலையே, அகிலம் உண்ட மாலுக்கு அணிகலம் தண் அம் துழாயே – உலகத்தை உண்ட திருமாலுக்கு ஆபரணமாவது குளிர்ந்த அழகிய துளசிமாலையே, மயில் ஏறும் ஐயன் காலுக்கு அணிகலம் வானோர் முடியும் கடம்புமே - மயில் வாகனத்தில் ஏறிவரும் முருகக்கடவுளின் திருவடிக்கு ஆபரணமாவன தேவர்களது மகுடங்களும் கடப்ப மலர் மாலையுமே, கையில் வேலுக்கு அணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே – அவர் திருக்கரத்திலுள்ள வேலாயுதத்துக்கு அணிசெய்வன அதனால் அழிந்து அதன்பெருமை விளங்கிநின்ற கடலும் சூரனும் கிரௌஞ்சமலையுமே.

குறிப்பு. 1. ஆல் - கல்லாலவிருட்சம். அது திருவருளைக் குறிப்பது.

2. உ - சிவன்.

3. வெண்டலைமாலை - வெண்டலை மாலை முதலியவற்றை அணிதல், எவ்வுயிரையும் சங்காரஞ்செய்யுங் கடவுள் தாம் என்பதை யாவரும் அறிந்து தம்மை அடைந்து பாசங்களினீங்கி முத்தியைப் பெறுதற்பொருட்டுச் சிவபெருமான் அவ்வுயிர்கள்மாட்டு வைத்த திருவருட்செயலைக் குறிப்பது.

4. அகிலமுண்ட மால் - உகாந்தகாலத்திலே உலகம் முழுவதையும் உண்டு தன் வயிற்றிலே அடக்கிக்கொண்டு நித்திரை செய்தலால் அவரை உலகமுண்டவர் என்பர்.

5. காலுக் கணிகலம் வானோர் முடி - தேவர்கள் வணங்குந் திருப்பாதமெனவே, முருகக்கடவுள் தேவகுரு என்பதும் பெறப்படும். கடம்பு - திருவருளைக் குறிப்பது.

6. வேற்படையானது மல மாயை கன்மங்களை வெற்றிகொள்ளுதலால், அவை வேலுக்கு அணிகலம் எனப்பட்டன. சூரன், மேரு வேலை என்பன முறையே மல மாயை கன்மங்களைக் குறிப்பன. மேரு - கிரௌஞ்சமலையைக் குறிப்பது.

(தா—ம்.) சிவபெருமான் சங்காரகாரணன். திருமால் பிரகிருதி காரியங்களைக் காக்குஞ் சத்தியுடையவர். முருகக்கடவுள் தேவகுருவும் ஞானசத்தி சொரூபருமாவர்.

63, முறையீடு.

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ வழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே யெனக்கிங்ஙன் சந்தித்ததே.

(இ—ள்) பாதித் திருவுருப் பச்சென்றவர்க்கு - பாதித் திருவடிவம் (உமாதேவி சேர்ந்திருத்தலால்) பச்சைநிறமாகி இருக்கின்ற சிவபெருமானுக்கு, தன் பாவனையைப் போதித்த நாதனை - பிரணவத்துக்குத் தாங்கொண்ட கருத்தை உபதேசித்த இறைவரை, போர் வேலனை - எக்காலத்தும் போர்புரியும் வேற்படையையுடைய கடவுளை, சென்று போற்றி உய்ய - யான் போய்த் துதித்து உய்யும்படி, சோதித்த மெய்யன்பு பொய்யோ - அந்நாளில் அவராற் சோதித்து அறியப்பட்ட மெய்யன்பு இந் நாளில் இன்மையால் அது பொய்யன்போ, அழுது தொழுது உருகிச் சாதித்த புத்தி எங்கு வந்து எனக்கு இங்ஙன் சந்தித்தது - அந்நாளில் மெய்யன்புடையவர் போல அழுது பணிந்து உருகிச் சாதித்த மனமானது எங்கேயிருந்து வந்து எனக்கு இங்கே கூடிற்று.

(தா—ம்) முருகக்கடவுள் தம்மை ஆட்கொண்ட காலத்திலுள்ளதாகிய மெய்யன்பு பிராரத்தவாதனையாற் குறைகின்றதென்று அக்கடவுளை நோக்கி முறையிட்டது.

64. இயமனுக்கு அஞ்சாமை.

பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவிடேன் வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாடிரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே.

(இ—ள்.) பட்டிக் கடாவில் வரும் அந்தகா - வஞ்சத்தையுடைய எருமைக்கடாவின் மேலேறி வருகின்ற இயமனே, வெய்ய சூரனைப் போய் முட்டிப் பொருத - கொடிய சூரபன்மனிடத்திற் சென்று தாக்கிப் போர்புரிந்த, செவ் வேல் பெருமான் திருமுன்பு நின்றேன் - சிவந்த வேலாயுதத்தைத் தரித்த முருகக்கடவுளின் சந்நிதியில் நிற்கின்றேன், சத்திவாள் என்றன் கையது - அன்றியும் அவரது சத்தியாகிய வாட்படையும் என்கையினிடத்துள்ளது, கட்டிப் புறப்படடா — போருக்கு ஆயத்தஞ்செய்து புறப்பட்டுவா, உனைப் பார் அறிய வெட்டிப் புறங்கண்டு அலாது விடேன் - உன்னை உலகம் அறியும்படி துணித்து முதுகு காட்டி ஓடுவது கண்டலாது விடமாட்டேன்.

குறிப்பு. 1. எக்காலத்தும் போர்செய்து இரத்தநிறம் இருத்தலின், "செவ்வேல்" என்றார். போர்செய்தலாவது மல மாயை கன்மங்களின் வலிகுன்றச் செய்தல்.

2. சத்திவாள் - திருவருள்.

(தா - ம்.) முருகக்கடவுளது அருளைப்பெற்ற யான் இனி இயமனுக்கு அஞ்சமாட்டேன் என்பதாம்.

65. இயமவாதனையை ஒழித்தருள வேண்டல்.

வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங்கூற்றன் விடுங்கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டுங் கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும்விட் டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே.

(இ—ள்.) கர அசலங்கள் எட்டும் குலகிரி எட்டும் விட்டு ஓட - திக்குயானைகள் எட்டும் அட்டகுல பர்வதங் களையும் விட்டு ஓடும்படி, எட்டாத வெளி மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே - ஊனக்கண்ணுக்கு எட்டாத ஞான ஆகாயம் வரையும் அது மறையும்படி விரிக்கும் தோகை பொருந்திய மயில்வாகனத்தையுடையவரே, வெட்டும் கடாமிசைத் தோன்றும் வெம் கூற்றன் விடும் கயிற்றால் சட்டும்பொழுது விடுவிக்க வேண்டும் - கொலை செய்கின்ற எருமைக்கடாவின் மேலேறி வருகின்ற கொடிய இயமன் வீசுகின்ற பாசக்கயிற்றினால் என்னைக் கட்டும் பொழுது தேவரீர் அவன்கையினின்றும் அடியேனை விடு வித்தருளவேண்டும்.

குறிப்பு: 1. கராசலங்கள் (கர + அசலங்கள்) – துதிக் கைகளையுடை மலைகள், திக்குயானைகள். கராசலங்கள் ஆன்மதத்துவங்களைக் குறித்து நின்றன. இவை தத்தஞ் செயல்களின்றி நின்றன என்பது பொருள்.

2. குலகிரியெட்டு – அசுத்தமாயையும் வித்தியாதத் துவங்கள் ஏழும்.

3. எட்டாத வெளி - ஞானவெளி, தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட வெளி. மயில் என்னும் திரோதானசத்தி மாயாகாரியங்களைக் காரியப்படுத்தி, ஆன்மாக்கள் கன் மங்களை நுகரும்படி செய்து, தத்துவங்களுக்கு அப்பாற் பட்ட அருள்வெளியிலே ஒடுங்கச்செய்யும் என்பது.

(தா—ம்.) மலங்களை ஒழிக்கும் சத்தியையுடைய முருகக்கடவுளே! அடியேன் இயமன்கைப்படும்போது காத்துக்கொள்வீராக.

66. வாசக ஞானம்.

நீர்க்கு மிழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்
வேற்கு மரற்கன் பிலாதவர் ஞான மிகவுநன்றே.

(இ—ள்.) யாக்கை நீர்க்குமிழிக்கு நிகர் என்பர் - சரீரமானது நீர்க்குமிழிக்குச் சமானம் என்பர், செல்வம் நில்லாது பார்க்கும் இடத்து அந்த மின்போலும் என்பர்- செல்வமானது நிலைத்திராது; ஆராய்ந்து பார்க்குமிடத்து அந்த மின்னலை நிகர்க்கும் என்பர். இங்ஙனஞ் சொல்ப வர்கள், பசித்து வந்து ஏற்கும் அவர்க்கு இட என்னின்- பசித்துவந்து இரப்பவர்களுக்குக் கொடுக்க என்றால், எங்கு ஏனும் எழுந்திருப்பார் - (அதற்கு விருப்பின்றி) எவ்விடத்துக்காயினும் எழுந்துபோவார்கள், வேல் குமரற்கு அன்பிலாதவர் - அவரோ வேற்படையையுடைய குமாரக்கடவுளிடத்து அன்பில்லாதவர், ஞானம் மிகவும் நன்று - அவருடைய வாசகஞானம் மிகவும் நன்றாயிருக் கின்றது.

(தா—ம்.) தருமஞ்செய்யாதவர் ஞானம் வாசகஞான மேயன்றிப் பிறிதன்று.

67. முறையீடு.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா சலப்பன் னிருபுயனே.

(இ—ள்.) மத கும்ப கம்பம் - மதம்பொருந்திய மத்தகத்தையும் கட்டுந்தூணையும், தறுகண் - அஞ்சுவனவற் றிற்கு அஞ்சாமையையும், சிறு கண் - சிறிய கண்களையு முடைய, சங்கிராம சயிலம் சரசவல்லி - ஐராவத யானை யின் மகளாகிய இனிய குணத்தையுடைய தெய்வநாயகி, இறுகத் தழுவும் - நெருங்க அணைக்கும், கடக அசலப் பன்னிரு புயனே - கடகத்தை அணிந்த மலைபோலும் பன் னிரண்டு புயங்களையுடையவரே, பெறுதற்கு அரிய பிறவி யைப் பெற்றும் - அடைதற்கரிதாகிய மானுடப்பிறவியை அடைந்தும், நின் சிற்றடியைக் குறுகிப் பணிந்து பெறக்

கற்றிலேன் - உம்முடைய சிறிய திருவடியை அணுகி வணங்கி பெறுதற்குரிய வீடுபேற்றைப் பெறுவதற்குக் கற்றேனில்லை.

குறிப்பு: 1. சங்கிராமசயிலம் – போர்மலை; என்றது யானையை. சங்கிராமம் - போர்.

2. சிற்றடி -திருவருள். தெய்வயானை - கிரியாசத்தி.

(தா - ம்.) முருகக்கடவுளே! தேவரீரைப் பணிந்து மானுடப்பிறவியின் பயனை அடைகின்றேனில்லை.

68. திருவடித்தியானத்தின் பேறு.

**சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் சரணத்திலே**
**ஓடுங் கருத்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்**
**பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்**
**றுடும் பொழுது பரமாயிருக்கு மதீதத்திலே.**

(இ—ள்.) ஓடும் கருத்தை-பஞ்சப்புலன்களின் வழியே செல்லும் மனத்தை, சமரம் சாடும் தனிவேல் முருகன் சரணத்திலே - யுத்தத்திலே பகைவரை அழிக்கும் ஒப்பற்ற வேற்படையையுடைய முருகக்கடவுளுடைய திருவடிகளின்கண்ணே, இருத்த வல்லார்க்கு-இருத்த வல்லவர்களுக்கு, உகம் போய் சகம் போய் - பிரபஞ்சப்பற்றொழிந்து, பாடும் கவுரி பவுரி கொண்டாட — பாடுகின்ற பராசத்தி பவுரி என்னும் திருநடனத்தை மெச்ச, பசுபதி நின்று ஆடும் பொழுது - பரமசிவன் நின்று நடனஞ்செய்யும் பொழுது, அதீதத்திலே பரமாயிருக்கும் - துரியாதீத நிலையிலே பரமுத்தி சித்திக்கும்.

குறிப்பு. 1. உகம் போய்ச் சகம்போய் ...அதீதத்திலே - தத்துவங்களும் பிரபஞ்சப்பற்றும் நீங்கிப் பேரானந்தத்தை அநுபவிப்பவர் என்பது. பாடுங்கவுரி பவுரி கொண்டாடல் - பராசத்தி துணைசெய்தல். பசுபதி நின்றுடுதல் — பேரானந்தமுறுதல். ''ஆநந்தமொண்டருந்தி

நின்றுடல் காணும் அருண்மூர்த்தியாகக் கொண்ட திரு வம்பலத்தான் கூத்து.'' (உண்மைவிளக்கம் 37.) உகம், சகம் - உலகம்.

2. சரணத்திலே கருத்தையிருத்தவல்லார்க்கு அதீ தத்திலே பரமாயிருக்கும் என முடிக்க.

(தா—ம்.) முருகக்கடவுளின் திருவடியைத் தியானிப் போருக்குப் பரமுத்தி கைகூடும் என்பதாம்.

### 69. இயமபயமில்லை எனல்.

**தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்**
**கந்தச் சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன்வெம்பி**
**வந்திப் பொழுதென்னை யென்செய லாஞ்சத்தி வாளொன்**
**சிந்தத் துணிப்பன் றணிப்பருங் கோபத்ரி சூலத்தையே.(றினுற்**

(இ—ள்.) தந்தைக்கு முன்னம் தனிஞான வாள் ஒன்று சாதித்து அருள் கந்த சுவாமி - பரமசிவனுகிய தம் பிதாவுக்கு முன்னொருகாலத்திலே ஒப்பற்ற பிரணவத் தின் பொருளை உபதேசித்தருளிய முருகக்கடவுள், எனைத் தேற்றிய பின்னர் - அடியேனை ஞானோபதேசத்தால் திடப் படுத்திய பின்பு, காலன் வெம்பி வந்து இப்பொழுது என்னை என் செயலாம் - இயமனுனவன் கோபித்து வந்து இப்பொழுது அடியேனை என்ன செய்யமுடியும், தணிப்பு அரும் கோபத் திரிசூலத்தை - தணித்தற்கரிதாகிய கோ பத்தையுடைய அவனது திரிசூலத்தை, சத்தி வாள் ஒன் றினுல் சிந்தத்துணிப்பன் - அந்த ஞானவாள் ஒன்றைக் கொண்டு சிதறும்படி துண்டித்து விடுவேன்.

குறிப்பு. 1. ஞானவாள் ஒன்று சாதித்தல்: சாதித் தல் - செய்தல், உபதேசஞ்செய்தல்.

2. தேற்றுதல் - திடப்படுத்துதல்.

3. சத்திவாள் - ஞானவாள், திருவருள்.

(தா-ம்.) முருகக்கடவுளது திருவருளைப்பெற்றேனுகை யால், இயமனுக்கு அஞ்சேன் என்பதாம்.

### 70. மும்மலம் ஒழித்தற்கு ஏது.

**விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்று**
**மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த**
**பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி**
**வழிக்குத் துணைவடி வேலுஞ் செங்கோடன் மயூரமுமே.**

(இ—ள்.) விழிக்குத் துணை செங்கோடன் திரு மென் மலர்ப் பாதங்களே — எனது கண்களுக்குத் துணையாவன திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளுடைய மென்மையினையுடைய தாமரைமலர் போன்ற திருவடிகளே, மெய்ம்மை குன்றுமொழிக்குத் துணை முருகா எனும் நாமங்களே - சத்தியம் தவறுத எனது வாக்குக்குத் துணை யாவது முருகா என்று விளிக்கப்படும் அவர் நாமமே, முன்பு செய்த பழிக்குத்துணை அவன் பன்னிரு தோளுமே - யான் முன்செய்த பாவத்தை நீக்குதற்குத் துணையாவன அவருடைய பன்னிரு புயங்களுமே, பயந்த தனிவழிக்குத் துணை வடிவேலும் மயூரமுமே - யான் அஞ்சுதற்குரிய தனிவழிக்குத் துணையாவன அவரது ஒளி பொருந்திய வேற்படையும் மயிலுமே.

குறிப்பு. 1. விழிக்குத் துணை திருமென்மலர்ப் பாதங்கள் - பிராரத்த வினையை அநுபவிக்கும்பொழுது மனமானது. கண்முதலிய பஞ்சப்பொறிகளின்வழியே சென்று விடயங்களைப்பற்றி அவற்றில் அழுந்தும். அவ்விடயங்களில் வைத்த விருப்பு வெறுப்புக்களால் ஆகாமியவினை ஏறும். அங்ஙனம் ஆகாமியவினை ஏறுதபடி முருகக்கடவுளுடைய திருவடிகளைத் தியானிக்கவேண்டும் என்பது.

2. மொழிக்குத்துணை முருகாவெனு நாமங்கள் - பிராரத்தவினையை அநுபவிக்கும்பொழுது வாக்கால் ஆகாமியவினை ஏறுதபடி அவருடைய திருநாமத்தை உச்சரிக்க வேண்டும் என்பது. நாமங்கள் என்புழிக் கள் அசை.

3, முன்பு செய்த பழிக்குத்துணை அவன் பன்னிரு தோள் - சஞ்சிதவினையைப் போக்குதற்கு அவருடைய பன்னிரு புயங்களையும் போற்றல் வேண்டும் என்பது.

4. பயந்த தனிவழிக்குத் துணை வடிவேலும் மயூரமும் - மல மாயைகளைப்போக்கி மேற்பிறவியெடாவண்ணம் துணையாயுள்ளன வேலும் மயிலுமாம். மயில் கன்மங்களை நுகர்வித்து மலபரிபாகம் வந்தவிடத்து வேல் ஞானத்தை அருளிப் பிறவியை நீக்கும். கன்மமின்மையால் மாயாமலமும் நீங்கும். இறக்கும் பொழுதும் பிறக்கும்பொழுதும் ஆன்மா ஒருதுணையுமின்றி இறந்து பிறந்து உழல்வதால் ''தனிவழி'' என்றார்.

(தா—ம்.) எனது மல மாயை கன்மங்களைப் போக்குதற்கு முருகக்கடவுளுடைய திருவடிகளும் திருநாமங்களும் திருப்புயங்களும் வேலும் மயிலும் துணைகளாம்.

### 71. முத்திக்குபாயம்.

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமாறுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

(இ—ள்,) துருத்தி எனும்படி வாயுவைச் சுற்றி முறித்து அருத்தி கும்பித்து- துருத்தி என்று சொல்லும்படி பிராணவாயுவை வெளியிற் செல்லாது வளைத்துத் தடுத்து உள்ளே நிரப்பி நிறுத்தி, உடம்பை ஒறுக்கில் என் ஆம் - உடம்பை வருத்துதலினால் என்னபயனுண்டாம், சிவயோகம் என்னும் குருத்தை அறிந்து - சிவயோகம் என்னும் துரியநிலையை அறிந்து, முகம் ஆறு உடை குருநாதன் சொன்ன - ஆறுமுகங்களையுடைய குருநாதர் உபதேசித்தருளிய, கருத்தை மனத்தில் இருத்தும் - உபதேசப் பொருளை உங்கள் மனத்திலே அழுத்துங்கள், முத்தி கை கண்டது - முத்திநிலை கைகூடினதேயாகும்.

குறிப்பு. *1. கும்பித்தல் - பிராணவாயுவை உள்ளே நிறுத்தல்.*

2. *சுற்றிமுறித்தல் - வளைத்துத் தடுத்தல், பிராணவாயு வெளியிற் செல்லாது தடுத்தல்.*

*3. அருத்தல்- உண்பித்தல், பிராணவாயுவை உள்ளே நிரப்புதல், பூரகஞ்செய்தல்.*

4. சிவயோகம் - கேவல சகலங்களும் தற்போதமும் நீங்கப்பெற்றுத் திருவருள் வியாபகத்துக்குள்ளாக ஆன்மா அடங்கி நிற்கும் துரியநிலை.

5. குருத்து - மரம்முதலியவற்றின் குருத்து. அது இங்கே தத்துவங்கள் முதலியன நீங்கப்பெற்ற ஆன்மாவின் சுத்தநிலையாகிய அருணிலைக்கு உவமையாகக் கூறப்பட்டது.

6. குருநாதன் சொன்ன கருத்தை மனத்திலிருத்தும் குருநாதர் உபதேசித்த உபதேசமொழியை இடைவிடாது தியானஞ் செய்யும் என்பது.

7. கண்டீர் - முன்னிலைப்பன்மையில் வரும் அசைமொழி.

(தா—ம்.) கருமயோகஞ் செய்யாது, சிவயோகஞ் செய்யின் முத்தி கைகூடும்.

72. முருகக்கடவுளைத் தியானித்தலின் பேறு.

**சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்**
**வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி**
**காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்**
**சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.**

*(இ—ள்.)* சேந்தனை – சிவந்த திருமேனியுடையவரும், கந்தனை - ஆறு திருவடிவங்களும் ஒன்றுகச் சேர்க்கப்பட்டவரும், செங்கோட்டு வெற்பனை - திருச்செங்கோட்டு மலையில் எழுந்தருளியிருப்பவரும், செம் சுடர் வேல் வேந்தனை

- சிவந்த ஒளிபொருந்திய வேற்படையையுடைய இறைவரும், செந்தமிழ் நூல் விரித்தோனை - செந்தமிழ் நூல்களை அகத்தியமுனிவருக்கு விரித்துரைத்தருளினவரும், விளங்கு வள்ளி காந்தனை - அழகு விளங்குகின்ற வள்ளி நாயகியாருக்குத் தலைவரும், கந்தக் கடம்பனை - வாசனை பொருந்திய கடப்பமலர்மாலையை அணிந்தவரும், கார் மயில் வாகனனை - பச்சைநிறம்பொருந்திய மயில்வாகனத்தையுடையவரும் ஆகிய முருகக்கடவுளை, சாந்துணைப் போது மறவாதவர்க்கு-இறக்குநாளளவும் மறவாதவர்க்கு, ஒரு தாழ்வில்லை - ஒரு குறைவுமில்லை.

குறிப்பு: 1. கார் - பச்சை; கறுப்பு.

2. சாந்துணைப்போது: துணை - அளவு, எல்லை. போது - காலம்.

(தா—ம்.) முருகக்கடவுளை இறக்குமளவும் நினைப்பவர்க்கு ஒரு குறைவுமில்லை என்பதாம்.

73. திருவருளின் செயல்.

**போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்**
**வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து**
**தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே**
**ஆக்கு மறுமுக வாசொல் லொணாதிந்த வாநந்தமே.**

(இ—ள்.) போக்கும் வரவும் — தோற்றநாசமும், இரவும் பகலும் - கேவல சகலங்களும், புறம்பும் உள்ளும்— புறம்பு உள் என்னும் வேற்றுமையும், வாக்கும் வடிவும் — சாயலும் உருவமும், முடிவும் - ஆதியும் அந்தமும், இல்லாது ஒன்று - இல்லாததாகிய ஒப்பற்ற திருவருளானது, வந்து வந்து தாக்கும் - இடைவிடாது வந்து என்னைப் பொருந்தாநிற்கும், மனோலயம் தானே தரும் – எனக்கு மனோலயத்தைத் தானே உண்டாக்கும், எனைத்தன்வசத்தே ஆக்கும் - என்னைத் தன்வயப்படுத்தும், அறுமுகவா – சண்முகக்கடவுளே, இந்த ஆநந்தம் சொல்லொணாது - இந்த ஆநந்தத்தின் தன்மை சொல்லமுடியாது.

குறிப்பு: 1. போக்கும் வரவும் - இறப்பும் பிறப்பும்.

2. இரவும் பகலும்—இரவு-தத்துவங்களின்தொழிற் பாடின்றி ஆணவ மலத்தோடுமாத்திரங் கூடியிருக்கும் ஆன்மாவின் கேவலநிலை. பகல்–ஆன்மா தத்துவங்களோடு கூடி விடயங்களை நுகரும் சகலநிலை. இஃதன்றி அச்சகல நிலையில் நிகழும் மறப்புநினைப்புக்கள் இரவு பகல் என்றும் கேவலசகலங்கள் என்றுஞ் சொல்லப்படும்.

3. புறம்புமுள்ளும் இல்லாதது - புறம்பு உள் என்னும் வேறுபாடின்றி எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருத்தல்.

4. வாக்கு - விதம், மாதிரி, சாயல், நிறம்.

5. முடிவும் - இனம்பற்றி ஆதி என்பதும் வருவிக்கப் பட்டது.

6. தன்வசத்தேயாக்கும் - ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகளின்றி அருள்வடிவாயிருத்தல்.

(தா—ம்.) முருகக்கடவுளே! உன் திருவருளால் வரும் ஆநந்தம் இன்ன தன்மையது என்று சொல்லமுடியாது.

### 74. சுத்தநிலை.

**அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்**
**குராப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடியவைவர்**
**பராக்கறல் வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால்**
**இராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.**

(இ—ள்.) (அருள்நிலையிலிருத்தற்கு) அராப்புனை வேணியன் சேய் அருள் வேண்டும் — பாம்பை அணிந்த சடையினையுடைய சிவபெருமானுக்குப் புத்திரராகிய முருகக்கடவுளது திருவருள் வேண்டும், அவிழ்ந்த அன்பால் குராப்புனை தண்டை அம் தாள் தொழல்வேண்டும் - கசிந்துருகும் அன்போடு குராமலரை அணிந்த தண்டையையுடைய அவரது திருவடியை வணங்கலும் வேண்டும், கொடிய ஐவர் பராக்கு அறல் வேண்டும் - கொடிய பஞ்

சப் பொறிகளும் விடயங்களிற் சென்று பற்றல் ஒழிதல் வேண்டும், மனமும் பதைப்பு அறல் வேண்டும் - மனமும் ஓயாது சலனப்படுதல் கெடவேண்டும், என்றும் - என்று சொல்லுமிடத்து, இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்ல - கேவல சகலங்கள் ஒழிந்த அவ்வருள் நிலையிலிருத்தல் இலகுவான காரியமன்று.

குறிப்பு: 1. கொடிய ஐவர் பராக்கறல்வேண்டும்-மனத்தின் புறத்தொழில் இந்திரியங்களை அதிட்டித்தலாம். அம்மனமானது ஐம்பொறிகளையும் சத்தாதிவிடயங்களிலே பிரவிருத்திக்கச்செய்தலால் ''ஐவர் பராக்கற வேண்டும்'' என்றார்.

2. மனமும் பதைப்பறல் வேண்டும்—மனத்தின் உட்டொழில் சங்கற்பித்தலும் ஓயாமற் சலனப்படுதலுமாதலால், பதைப்பறல் வேண்டும் என்றார்.

3. இராப்பகல் - (செய். 73. பார்.)

(தா—ம்.) இராப்பகலற்றவிடத்திலிருத்தற்கு முருகக்கடவுளது திருவருள் முதலியன வேண்டும் என்பதாம்.

## 75. நெஞ்சறிவுறுத்தல்.

**படிக்கின் றிலைபழ னித்திரு நாமம் படிப்பவர்தாண்**
**முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு**
**மிடிக்கின் றிலைபர மாநந்த மேற்கொள விம்மிவிம்மி**
**நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே.**

(இ—ள்.) நெஞ்சமே - மனமே, பழனித் திருநாமம் படிக்கின்றிலை - பழனி என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுள்மீது பாடப்பட்ட பாக்களைப் படிக்கின்றாயில்லை, படிப்பவர் தாள் முடிக்கின்றிலை - அவற்றைப் படிக்கும் அடியவர்களுடைய பாதங்களை உனது சிரசிலே சூட்டுகின்றாயில்லை, முருகா என்கிலை - முருகா என்று சொல்லுகின்றாயில்லை, முசியாமல் இட்டு மிடிக்கின்றிலை - மனம் தளராது இரப்போர்க்குக் கொடுத்து வறுமை

அடைகின்றுயில்லை, பரமாநந்தம் மேற்கொள விம்மி விம்மி நடிக்கின்றிலை - பரமாநந்தம் மேற்பட அழுதழுது கூத்தாடுகின்றிலை, இனி நமக்கு தஞ்சம் ஏது - இனி நமக்குப் பற்றுக்கோடாவது யாது?

குறிப்பு: 1. முசித்தல் - இளைத்தல், சோர்வடைதல். இளைப்பு நீக்கல் எனப் பொருள்படும். ''முசிப்பாற்றி'' என்னும் வழக்கையும் நோக்குக.

2. பழனி - முருகக்கடவுளது ஆறு திருப்பதிகளில் ஒன்றாகிய திருவாவிநன்குடி.

(தா—ம்.) மனமே, நீ பழனித் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுள்மீது பாடப்பட்ட பாடல்களைப் படித்தல் முதலியன செய்கின்றிலை, இனி நமக்குத் தஞ்சம் யாது?

76. முறையீடு.

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் றணிகைக் குமரநின் றண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே.

(இ—ள்.) குன்று எறிந்த தாடாளனே - கிரௌஞ்சமலையை வேலாற் பிளந்த ஊக்கமுடையவரே, தென் தணிகைக் குமர - அழகிய தணிகைமலையில் எழுந்தருளியிருக்கும் குமரக்கடவுளே, கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றம் என் - தன் செய்கையிற் பட்சபாதமில்லாத பிரமனுக்கு அடியேன் செய்த பிழையாது, நின் தண்டை அம் தாள் சூடாத சென்னியும் - உம்முடைய தண்டையணிந்த திருவடிகளை வணங்காத தலையினையும், நாடாத கண்ணும் - உமது திருவடிகளை நோக்காத கண்களையும், தொழாத கையும் - உன் திருவடிகளைக் கூப்பி வணங்காத கைகளையும், பாடாத நாவும் - உமது திருவடிகளின் புகழைப் பாடாத நாவையும், தெரிந்து எனக்கே படைத்தனன் - ஆராய்ந்து எனக்கே படைத்தனன்.

குறிப்பு: 1. கோடுதல் - நெறிதப்புதல், வளைதல்.

2. தாடாளன் - முயற்சியுள்ளோன்.

3. தணிகை - திருத்தணிகை. தென் - அழகு.

(தா—ம்.) முருகக்கடவுளே! உமது திருவடியை வணங்குதற்கேற்ற அவயவங்களை அடியேன் பெற்றேனில்லை.

77. மாதர்மயக்கம் ஒழித்தற்குபாயம்.

**சேல்வாங்கு கண்ணியர் வண்ணப்ப யோதரஞ் சேரவெண்ணி**
**மால்வாங்கி யேங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே**
**கால்வாங்கி நிற்குங் களிற்றன் கிழத்தி கழுத்திற்கட்டு**
**நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி பூங்கழ னோக்குநெஞ்சே.**

(இ—ள்.) நெஞ்சே - மனமே, சேல் வாங்கு கண்ணியர் வண்ணப்பயோதரம் சேர எண்ணி - சேல்மீனின் தன்மையைக் கவர்ந்துகொண்ட கண்களையுடைய பெண்களுடைய அழகிய தனங்களைத் தழுவக்கருதி, மால்வாங்கி ஏங்கி மயங்காமல் - மோகங்கொண்டு திகைத்து மயங்காமல், வெள்ளிமலை எனவே கால்வாங்கி நிற்கும் களிற்றன் கிழத்தி கழுத்தில் கட்டும் நூல் வாங்கிடாது - வெள்ளி மலையென்றே சொல்லும்படி கால்களை வளைத்துநிற்கும் வெள்ளையானையையுடைய இந்திரன்மனைவியாகிய இந்திராணி கழுத்திற்கட்டிய திருமங்கலியம் கவராதிருக்கும் பொருட்டு, அன்று வேல் வாங்கி பூங்கழல் நோக்கு - அவ்விந்திரனுடைய பகைவரை அழிக்க அந்நாளில் வேற்படையை எடுத்தவராகிய முருகக்கடவுளின் தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தியானிப்பாயாக.

குறிப்பு: ஏங்கல் - திகைத்தல்.

(தா—ம்.) மனமே பந்தத்துக்கேதுவாகிய மாதர் மயக்கத்தை ஒழித்து, முத்திக்கேதுவாகிய முருகக்கடவுளின் திருவடிகளைக் கருதுவாய்.

78. அந்தியகாலத்தில் முருகக்கடவுளே துணையாவர்.

கூர்கொண்ட வேலனைப் போற்றும லேற்றங்கொண் டாடுவிர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று பூண்பணவும்
தார்கொண்ட மாதரு மாளிகை யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு வீர்நும் மறிவின்மையே.

(இ—ள்.) கூர்கொண்ட வேலனைப் போற்றுமல் - கூர்மைபொருந்திய வேற்படையையுடைய முருகக்கடவுளை வாழ்த்தாமல், ஏற்றம் கொண்டு ஆடுவிர்காள் - பிறர் புகழைப் பாராட்டுவோர்களே, போர் கொண்ட காலன் உமைக்கொண்டு போம் அன்று-போர்த்தொழிலைத் தனக்கு உரிமையாகக்கொண்ட இயமன் உங்களைத் தனது பாசக் கயிற்றுற் கட்டிக்கொண்டு போகும் அந்த மரணகாலத்தில், பூண்பனவும் தார்கொண்ட மாதரும் மாளிகையும் பணச் சாளிகையும் - உங்களால் அணியப்படும் அணிகளையும் பூமாலையை அணியாகக்கொண்ட பெண்களையும் வீடுகளை யும் பணப்பைகளையும், ஆர்கொண்டு போவர் - ஆர் கொண்டுபோகப் போகின்றார்கள், ஐயோ கெடுவீர் - ஐயோ கெடுவீர், நும் அறிவின்மையே - இதனை உணரா திருத்தல் உங்கள் அறியாமையாம்.

குறிப்பு: ஏற்றம் - உயர்ச்சி, புகழ்.

(தா—ம்.) முருகக்கடவுளை வணங்காது பிறர்புகழைப் பாராட்டுவோர்களே உங்கள் அறியாமையிருந்தபடி என்னை.

79. மாதர்மயக்கத்தை ஒழிக்க வேண்டல்.

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள் வாய்செய்ய வேன்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா விளங்கும ராவம ராவதி காவலனே.

(இ—ள்.) செய்ய வேல் முருகா - செந்நிறம்பொருந்திய வேற்படையையுடைய முருகக்கடவுளே, கொந்தார்

கடம்பு புடைசூழ் திருத்தணிக்குன்றில் நிற்கும் கந்தா — பூங்கொத்துகள் நிறைந்த கடப்பமரங்கள் பக்கங்களில் நிற்கின்ற திருத்தணிகைமலையில் எழுந்தருளியிருக்கும் கந்தவேளே, இளம் குமரா - இளமையினையுடைய குமர வேளே, அமராவதி காவலனே — இந்திரனுடைய நகரத்துக்குக் காவலரே, பந்து ஆடும் மங்கையர் செங்கயல் பார்வையில் பட்டு உழலும் சிந்தாகுலம்தனைத் தீர்த்து அருள்வாய் - பந்துவிளையாடும் பெண்களது சிவந்த கயல் மீன்போலுங் கண்களில் அகப்பட்டுச் சுழல்கின்ற எனது மனோவியாகுலத்தை நீக்கியருள்வீராக.

குறிப்பு. *1.* செங்கயற் பார்வை - கண் பிறழ்ச்சியாலும் உருவத்தாலும் நிறத்தாலும் கயல்மீனை ஒத்திருத்தலாற், ''செங்கயற் பார்வை'' என்றும், செவ்வரி பரந்திருத்தலால் ''செங் கயல்'' என்றும் கூறினர்.

2. செய்ய - அழகிய, சிவந்த, செப்பமான எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம்.

(தா—ம்.) முருகக்கடவுளே! மாதர்மயக்கத்தினால் வருந்துகின்ற என்மனவருத்தத்தை நீக்கியருளும்.

80. அந்தியகாலத்திலே தரிசனம் வேண்டல்.

**மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே**
**தோகைப் புரவியிற் றோன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்**
**த்யாகப் பொருப்பைத் திரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்**
**பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே.**

(இ—ள்.) சுத்த நித்த முத்தித்தியாகப் பொருப்பை - சுத்தமும் நித்தமுமாகிய முத்தியை வரையாதுகொடுக்கும் மலைபோன்ற வள்ளலும், திரிபுர அந்தகனை - முப்புரங்களை அழித்தவரும், திரியம்பகனை - முக்கண்ணரும் ஆகிய சிவனை, பாகத்தில் வைக்கும் பரமகல்யாணிதன் பாலகனே - தமது இடப்பாகத்தில் வைத்திருக்கின்ற மேலான மங்களகுணங்களையுடையவராகிய உமாதேவியா

ரின் புதல்வரே, மாகத்தை முட்டிவரும் நெடும்கூற்றன் வந்தால் - ஆகாயத்தை முட்டிவரும் நெடிய இயமன் இறுதிக்காலத்து எருமைக்கடாவின்மீது ஏறிவந்தால், என் முன்னே தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய் - எனக்கெதிரில் மயிலாகிய குதிரையின்மீதேறி வந்து தரிசனம் தந்து நிற்பாயாக.

குறிப்பு. 1. தியாகம் - கொடை.

2. திரிபுராந்தகன் - (செய். 3. பார்.)

3. திரியம்பகன் - முக்கண்ணன். சிவன். திரி + அம்பகம்: திரி - மூன்று. அம்பகம் - கண்.

(தா—ம்.) முருகக்கடவுளே, இயமன் அந்தியகாலத்தில் எருமைக்கடாவில் ஏறிவந்தால் நீயும் மயில்வாகனத்திலேறி எனக்கெதிரே வரவேண்டும்.

81. அருள்வடிவாயிருத்தலின் இயமபயமின்று.

**தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பால்**
**ஆரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற்கட்டுஞ்**
**சிராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே**
**வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.**

(இ—ள்.) தாரா கணம் எனும் தாய்மார் அறுவர் தரும் முலைப்பால் ஆராது - நட்சத்திரக்கூட்டம் என்னும் தாய்மார் அறுவரும் தந்த முலைப்பாலை உண்டு திருப்தியாகாது, உமை முலைப்பால் உண்ட பாலன் - உமாதேவியாரது முலைப்பாலையுங் குடித்த பாலகராகிய முருகக்கடவுள், அரையில் கட்டும் சீராவும் கையில் சிறுவாளும் வேலும் என் சிந்தையவே - தமது திருவரையிற் கட்டும் கச்சும் திருக்கரத்தின்கணுள்ள சிறிய வாளும் வேலாயுதமும் என்மனத்தில் இருக்கின்றன. ஆதலால், அந்தகா வாராது அகல் - இயமனே என்னை நாடி வராது நீங்கு, வந்தபோது உயிர் வாங்குவன் - வருவையாயின் வந்த அப்பொழுதே உன் உயிரைக் கவர்வேன்.

குறிப்பு. 1. தாரா கணம்:—தாரா - நட்சத்திரம். கணம் - கூட்டம்.

2. அறுவர் தரு முலைப்பால் - அபரஞானம். தாய்மார் அறுவர் - அசச்சமயங்கள் ஆறு.

3. உமை முலைப்பால் — பரஞானம்.

4. சீரா, சிறுவாள், வேல் - இவை திருவருளைக் குறித்துநின்றன.

(தா—ம்.) முருகக்கடவுளின் திருவருள் என் சிந்தையிற் குடிகொண்டிருத்தலால், இயமன் எனை அணுகான் என்பது.

82. திருவடிக்கன்பு வேண்டல்.

**தகட்டிற் சிவந்த கடம்பையு நெஞ்சையும் தாளிணைக்கே**
**புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்புண்ட ரிகனண்ட [டிப்**
**முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்டவெட்**
**பகட்டிற் பொருதிட்ட நிட்டுர சூர பயங்கரனே.**

(இ—ள்.) புண்டரீகன் அண்ட முகட்டைப் பிளந்து வளர்ந்து - தாமரைப்பூவிலிருப்பவராகிய பிரமதேவரது அண்டத்தின் உச்சியைக் கிழித்து வளர்ந்து, இந்திரலோகத்தை முட்ட எட்டி - இந்திரலோகத்தை முட்ட எட்டி, பகட்டின் பொருதிட்ட - ஆண்யானையைப்போலப் போர் புரிந்த, நிட்டூர சூர பயங்கரனே - கொடிய சூரனுக்கு அச்சத்தை உண்டாக்கின கடவுளே, தகட்டின் சிவந்த கடம்பையும் - பழுக்கக் காய்ச்சிய தகடுபோலச் சிவந்த கடப்பமலர்மாலையையும், நெஞ்சையும் - எனது மனத்தையும், தாள் இணைக்கே புகட்டிப் பணிய - உமது திருவடிகள் இரண்டின்கண்ணும் புகவிட்டு வணங்க, பணித்தருளாய் - கட்டளையிட்டருள்வீராக.

குறிப்பு. 1. கடம்பு-இங்கே அன்பைக்குறித்துநின்றது
2. பகடு - ஆண்யானை.

(தா—ம்.) முருகக்கடவுளே, எனது மனத்தை உமது திருவடிகளிலே நன்றாகப் பதித்து அன்போடு அடியேன் வணங்கும்படி அருள் செய்யவேண்டும்.

83. முருகக்கடவுள் மலங்களை நீக்கி ஞானத்தை அருளுவர்

**தேங்கிய வண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே**
**பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை**
**தாங்கி நடப்ப முறிந்தது சூரன் றளந்தனிவேல்**
**வாங்கி யனுப்பிடக் குன்றங்க ளெட்டும் வழிவிட்டவே.**

*(இ—ள்.) தேங்கிய அண்டத்து இமையோர் சிறை விட - நிறைந்த சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களுடைய சிறை நீங்க, சிற்றடிக்கே பூம்கழல் கட்டும் பெருமாள் - தமது சிறிய திருவடியிலே அழகிய வீரக்கழலை அணிந்த முருகக்கடவுள், கலாபப் புரவி மிசை தாங்கி நடப்ப - மயிலாகிய குதிரையின்மீது போர்க்குரிய ஆயுதங்களைத் தரித்துச் செல்ல, சூரன் தளம் முறிந்தது - சூரனுடைய சேனை தோற்றது, தனி வேல் வாங்கி அனுப்பிட - ஒப்பற்ற வேற்படையை எடுத்து அனுப்பவே, குன்றங்கள் எட்டும் வழிவிட்ட - மலைகள் எட்டும் வழிவிட்டன.*

குறிப்பு. 1. தேங்கிய இமையோர் என இயையும்.
2. இமையோர் சிறை - ஆன்மாக்களைப் பந்தித்த மும்மலங்கள்.
3. பூங்கழல் - அருளின் வெற்றியைக் குறிப்பது.
4. கலாபப் புரவிமிசை தாங்கி நடப்ப முறிந்தது சூரன்றளம் - முருகக்கடவுள் தமது திரோதானசத்தியாகிய மயிலைச் செலுத்துவதினால், கன்மங்கள் நீங்கின என்பது.
5. தனி வேல் வாங்கி யனுப்பிடக் குன்றங்களெட்டும் வழிவிட்ட - ஞானசத்தியாகிய வேற்படையைச் செலுத்துவதினால், மலமும் மாயையும் நீங்கின என்பது. குன்றங்கள் எட்டு - அசுத்தமாயையும் அதன் காரியமான வித்தியாதத்துவங்கள் ஏழும்.

(தா—ம்.) முருகக்கடவுள் தமது கிரியாசத்தி ஞானசத்திகளினால் ஆன்மாக்களைப் பந்தித்திருக்கும் மும்மலங்களையும் நீக்கி ஞானத்தை அருளுவர் என்பதாம்.

84. அடைக்கலம் வேண்டல்.

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும் போய்ப்
பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே.

(இ—ள்.) மை வரும் கண்டத்தர் - கருமைபொருந்திய மிடற்றினையுடையவராகிய சிவபெருமானுடைய, மைந்த - குமாரரே, கந்தா - கந்தவேளே, என்று வாழ்த்தும் - என்று சொல்லித் துதிக்கின்ற, இந்தக் கை வரும் தொண்டு அன்றி - இந்தக் கைவந்ததொண்டுசெய்ய அறிவேனன்றி, மற்று அறியேன் - வேறொன்றும் அறியேன், கற்ற கல்வியும் போய் - நான் கற்ற நூல்களையும் மறந்து, பைவரும் கேளும் பதியும் கதற - துயருறுகின்ற உறவினரும் பெண்டிர் மக்களும் கதறியழ, பழகி நிற்கும் ஐவரும் கைவிட்டு மெய்விடும்போது - விடயங்களில் இடையறாது பற்றிநிற்கும் ஐம்பொறிகளும் அவ்வாறு பற்றாதுநிற்க இத்தேகத்தைவிட்டு நீங்கும் பொழுது, உன் அடைக்கலம் - அடியேன் உமதடைக்கலம்.

குறிப்பு. 1. கைவரும் தொண்டு - பழகின தொண்டு.

2. பைவரும் - துயருறுகின்ற. பைவரல் - துயருறுதல்.

3. கைவிடுதல் - ஐம்பொறிகளும் தத்தம் தொழில்களைச் செய்ய இயலாதுவிடுதல்.

4. பதி - வீட்டிலுள்ள மக்களும் மாதரும். ஆகுபெயர்.

(தா—ம்.) முருகக்கடவுளே, வாயாலே துதிப்பதன்றி வேறு தொண்டறியாத அடியேனை இறக்கும்பொழுது வந்து காத்தருளவேண்டும்.

85. முத்திக்குபாயம்.

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.

(இ—ள்.) விழி நாசி வைத்து - பார்வையை மூக்கு நுனியிற் பொருந்த வைத்து, மூட்டி - மூலாக்கினியைச் சுவாலிப்பித்து, மூலாதாரம் நேர்கபாலம் அண்ட - மூலாதாரத்திலிருந்து நேரே பிரமரந்திரத்தைப் பொருந்தும்படி, மூச்சை உள்ளே ஓட்டி - பிராணவாயுவைச் சுழுமுனை நாடிவழியாக ஓடச்செய்து, எங்கும் ஓடாமல் பிடித்து - மற்றைய இடைகலை பிங்கலைநாடிகள் வழியாக ஓடாமல் தடுத்து, சாதிக்கும் யோகிகளே - சாதனைசெய்யும் யோகிகளே, காட்டில் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் - காட்டில் வசிக்கின்ற குறமகளாகிய வள்ளி நாயகியின் தலைவராகிய முருகக்கடவுளின் திருவடிகளின் கண்ணே உங்கள் அறிவைப் புகவிட்டால், வீட்டில் புகுதல் மிக எளிது - மோக்ஷவீட்டிற் பிரவேசித்தல் மிகவும் எளிதாகும்.

குறிப்பு. பிரான்பதத்தே கருத்தைப் புகட்டல் - ஆன்மா இச்சாஞானக் கிரியைகளின்றித் திருவருளில் அடங்கி அதுவாய்நிற்றல். அது சிவயோகம்.

(தா—ம்.) கருமயோகஞ் செய்யும் யோகிகளே, நீங்கள் சிவயோகம் செய்யின் முத்தி எளிதிற் கைகூடும்.

## 86. இயமவாதனையை மறுத்தல்.

**வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ் சன்னறியாச்**
**சூலா யுதன்றந்த கந்த சுவாமி சுடர்க்குடுமிக்**
**காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்டென்**
**பாலா யுதம்வரு மோயம னோடு பகைக்கினுமே.**

(இ—ள்.) வேலாயுதன்—வேலாயுதத்தையுடையவரும், சுடர் குடுமிகாலாயுதக் கொடியோன் - ஒளிபொருந்திய உச்சிச் சூட்டினைக்கொண்ட கோழிக்கொடியையுடையவரும், சங்கு சக்ராயுதன் விரிஞ்சன் அறியா சூலாயுதன் தந்த கந்தசுவாமி – சங்கையும் சக்கராயுதத்தையுமுடைய திருமாலும் பிரமனும் அறியாத சூலாயுதத்தை

யுடைய சிவபெருமான் ஈன்றருளிய கந்தசுவாமியுமாகிய முருகக்கடவுளுடைய, அருள் ஆய கவசம் உண்டு - திருவருளாகிய கவசம் எனக்குண்டு. ஆதலால், யமனோடு பகைக்கினும் என்பால் ஆயுதம் வருமோ - அடியேன் இயமனோடு பகைக்கினும் அவனது சூலாயுதம் என்னிடத்து ஊறுசெய்ய வருமோ.

குறிப்பு. 1. சக்கராயுதம். சக்கரம் + ஆயுதம். சக்கரம் - வட்டம்.

2. காலாயுதம் - கோழி.

(நா—ம்.) அடியேன் முருகக்கடவுளின் திருவருளாகிய கவசத்தை அணிந்திருத்தலால் இயமனது கைச்சூலம் ஊறுசெய்யமாட்டாது.

87. அடியாரை இயமன் அணுகான் எனல்.

**குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்**
**அமரா வதியிற் பெருமா டிருமுக மாறுங்கண்ட**
**தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்**
**கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே.**

(இ—ள்.) குமரா சரணம் சரணம் என்று - குமரக்கடவுளே அடைக்கலம் அடைக்கலம் என்று, அண்டர் குழாம் துதிக்கும் அமராவதியில் பெருமாள் - தேவர்கூட்டம் தோத்திரம் பண்ணுகின்ற இந்திரபுரிக்கு அதிபதியாகிய முருகக்கடவுளுடைய, திருமுகம் ஆறும் கண்ட - ஆறு திருமுகங்களையும் தரிசித்த, தமராகி வைகும் தனியான ஞான தபோதனர்க்கு - அடியவராயிருக்கும் ஒப்பற்ற ஞானத்தைப்பெற்ற முனிவர்களுக்கு, இங்கு எமராசன் விட்ட கடை ஏடுவந்து இனி என் செயும் - இவ்விடத்தில் இயமராசன் அனுப்பிய மரண ஓலை வந்து யாது செய்யும்.

குறிப்பு. இயமராசன் விட்ட கடையேடு - இயமராசன் அனுப்பிய முடிவேடு எனினும் பொருந்தும். கடையேடு - மரணவோலை.

(தா—ம்.) முருகக்கடவுளின் திருவுருவத்தைத் தரிசித்த தவச்செல்வர்களிடத்து இயமன் விடும் மரணவோலை ஒன்றும் செய்யாது.

88. ஈடேற்ற வேண்டல்.

வணங்கித் துதிக்க வறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண் டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலாயுதந் தொட்ட நிர்மலனே.

(இ—ள்.) கொடியும் கழுகும் பிணங்க - காக்கையும் கழுகும் ஒன்ருேடொன்று சண்டைசெய்ய, அலகை துணங்கை கொண்டாட - பேய்கள் துணங்கைக் கூத்தாட, பிசிதர் தம் வாய் நிணம் கக்க - அசுரர் வாய் கொழுப்பைக் கக்க, விக்ரம வேலாயுதம் தொட்ட நிர்மலனே - வீரத்தையுடைய வேற்படையைச் செலுத்திய பரிசுத்தரே, வணங்கித் துதிக்க அறியா மனிதருடன் இணங்கிக் குணம் கெட்ட துட்டனை - உம்மை வணங்கித் தோத்திரம்பண்ண அறியாத துட்ட மனிதரோடு நட்புச்செய்து அதனுல் நற்குணங்களை இழந்த துட்டனுகிய அடியேனை. ஈடேற்றுவாய்- உய்யும்படிசெய்.

குறிப்பு. 1. துணங்கை - இருகையும் முடக்கிப் பழுப்புடை ஒற்றி ஆடுகின்ற ஒருவகைக் கூத்து.

2. பிசிதர் நிணம் கக்கல் - ஆணவமலச் செருக்கு நீங்கல்.

(தா—ம்.) முருகக்கடவுளே, துட்டர்சகவாசத்தாற் பழுதடைந்த என்னை ஈடேற்றி அருள்க.

89. அடியார் பிறவார்.

பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதலை
தங்காலி லிட்ட தறிந்தில ளுேதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே.

(இ—ள்.) பங்கேருகன் எனைப் பட்டோலையில் இட - பிரமதேவர் அடியேனைத் தமது கணக்கேட்டிற் பதிய, பண்டு தம் காலில் தளை இட்டது அறிந்திலனோ - முற் காலத்தில் நமது முருகக்கடவுள் தம் காலில் விலங்கிட் டதை அறியாரோ, பொங்கு ஓதம் வாய்விட பொன்னம் சிலம்பு புலம்ப - பொங்குகின்ற கடல் உரத்து முழங்கவும் பொன்மயமான அழகிய கிரௌஞ்சமலை புலம்பவும், தனி வேல் எடுத்துவரும் எம் கோன் அறியின் - ஒப்பற்றவேலா யுதத்தை எடுத்துவந்த எமது இறைவராகிய முருகக்கடவுள் அறிவாராயின், நான்முகனுக்கு இனி இரு விலங்கே - பிரம தேவருக்கு இனி இரண்டு விலங்குகள் உளவாகும்

குறிப்பு. 1. பொங்கோதம் - கன்மங்களைக்குறிப்பது.

2. பொன்னஞ் சிலம்பு - மாயை.

3. மல மாயை கன்மங்கள் நீங்கி முருகக்கடவுளது திருவருளைப் பெற்றேனாகையால், இனி எனக்குப் பிறப் பிறப்பு இல்லை என்றபடி.

(தா—ம்.) பிரமதேவர் இனி என்னைச் சிருட்டிப்பா ராயின், முருகக்கடவுள் அவருடைய கைகளுக்கும் விலங் கிடுவர்.

90. முருகக்கடவுளுடைய சகளவடிவத்தின் சிறப்பு.

**மாலோன் மருகனை மன்றுடி மைந்தனை வானவர்க்கு**
**மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்**
**சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ**
**நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே.**

(இ—ள்.) மாலோன் மருகனை - திருமாலுடைய மரு கரும், மன்றுடி மைந்தனை - சிற்சபையில் ஆநந்த நடனஞ் செய்யும் சிவபிரானுடைய குமாரரும், வானவர்க்கு மேலான தேவனை - தேவர்களுக்கு மேலான கடவுளும், மெய்ஞ்ஞான தெய்வத்தை - உண்மைஞானத்தைத் தரும் தெய்வமும், மேதினியில் சேல் ஆர் வயல் பொழில் செங்

கோடனை - பூமியிலுள்ள சேல்மீன்கள் நிறைந்த வயல்களும் சோலைகளும் சூழ்ந்த திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருப்பவருமாகிய முருகக்கடவுளை, சென்று கண்டு தொழ - அடியேன் போய்த் தரிசித்து வணங்க, அந்தநான்முகன் - அந்தப் பிரமதேவர், நாலாயிரம் கண் படைத்திலனே - நாலாயிரம் கண்களைப் படைத்தாரில்லையே.

(தா—ம்.) திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளின் பேரழகைக்கண்டு வணங்குதற்கு எனது இரண்டுகண்களும் போதா என்க.

91. முருகக்கடவுளை வணங்குதலின் பேறு.

**கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு**
**வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்**
**பொருமா வினைச்செற்ற போர்வே லனைக்கன்னிப் பூகமுடன்**
**தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே.**

(இ—ள்.) கருமால் மருகனை - கரிய நிறத்தினராகிய திருமாலுடைய மருகரும், செம் மான் மகளைக் களவு கொண்டு வரும் மாகுலவனை - சிவந்த மான்மகளாகிய வள்ளிநாயகியைக் களவெடுத்துவந்த வேட்டுவரும், சேவல் கை கோளனை-சேவற்கொடியைக் கையிற் கொண்டவரும், வானம் உய்யப் பொரும் மாவினைச் செற்ற போர் வேலனை-விண்ணுலகம் உய்யும்படி போர்புரிந்த சூரனாகிய மாமரத்தைத் துணித்த போர்க்குரிய வேற்படையையுடையவரும், கன்னிப் பூகம் உடன் மாதரு மருவு செங்கோடனை - இளங் கமுக மரங்களோடு மாமரங்களும் பொருந்தப்பெற்ற திருச்செங்கோட்டு மலையையுடையவருமாகிய முருகக்கடவுளை, வாழ்த்துகை சாலநன்று - வாழ்த்துதல் மிகவும் நன்மையாகும்.

குறிப்பு. ''கருமான் மருகன்'' என்றதனால், தெய்வயானையம்மையாகிய இச்சாசத்தியையும், ''செம் மான் மகளை'' என்றதனால் வள்ளிநாயகியாராகிய கிரியாசத்தி

யையும், ''சேவற் கைக்கோளனை'' என்றதனால் மாயை யைக் காரியப்படுத்தும் பரிக்கிரகசத்தியையும், 'வேலனை' என்றதனால் ஞானசத்தியையும் முருகக்கடவுள் உடைய வர் என்பதைக் குறிப்பாய் அறிக.

(தா—ம்.) முருகக்கடவுளை வணங்குதலால் மல மாயை கன்மங்கள் நீங்கி ஞானம்பெறலாம்.

92. திருவடி வேண்டல்.

**தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் குஞ்சுத்த ஞானமெ**
**தண்டையம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர் [னுந்**
**மண்டலங் கொண்டுபண் டண்டரண் டங்கொண்டு மண்டிமிண்டக்**
**கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேறொட்ட காவலனே.**

(இ—ள்.) சண்ட தண்ட வெம் சூர் - வேகம் பொருந் திய சேனையையுடைய கொடிய சூரனானவன், பண்டு மண் டலம் கொண்டு - முன்னாளில் மண்ணுலகத்தைக் கைக் கொண்டு, அண்டர் அண்டம் கொண்டு மண்டி மிண்டக் கண்டு - தேவர் உலகையும் கவர்ந்து நெருங்கிப் பொரு தலைக் கண்டு, அண்டர் உருண்டு விண்டு ஓடாமல் - தேவர் கள் உருண்டு தம்முலகைவிட்டு ஓடாதபடி, வேல் தொட்ட காவலனே - வேற்படையைச் செலுத்திய கடவுளே, தொண்டர்கள் கண்டு அண்டி மொண்டு உண்டு இருக்கும் - அடியார் கண்டு நெருங்கி அள்ளி உண்டுகொண்டிருக்கும், சுத்தஞானம் எனும் தண்டை அம் புண்டரிகம் தருவாய் - சுத்தஞானம் என்று சொல்லப்படும் தண்டையை அணிந்த அழகிய திருவடிகளாகிய தாமரைகளை அடியேனுக்கும் தந்தருள்வீராக.

குறிப்பு. 1. சண்டம் - வேகம். வலி எனினும்பொருந் தும்.

2. தண்டம் - சேனை.

(தா—ம்.) முருகக்கடவுளே, உமது அன்பர் அழுந்தி யிருக்கும் திருவடிகளை அடியேனுக்கும் தந்தருள்வீராக.

93. முருகக்கடவுளது பராக்கிரமம்.

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை திருவரையிற்
கிண்கிணி யோசை பதிறு லுலகமுங் கேட்டதுவே.

(இ—ள்.) மண் கமழ் உந்தித் திருமால் வலம்புரி ஓசை - பூமியை உண்டதினால் மண்ணினது மணம் கமழுகின்றவயிற்றினையுடைய திருமாலுடைய வலம்புரிச் சங்கின் ஓசை, அந்த விண் கமழ் சோலையும் வாவியும் கேட்டது - அந்த விண்ணுலகத்துள்ள வாசனைபொருந்திய சோலையிலும் வாவியிலும் கேட்டது, திண் கிரி சிந்த விளையாடும் பிள்ளை - வேலாயுதத்தையெடுத்து வலிமைபொருந்திய கிரௌஞ்சமலை சிதறும்படி விளையாடிய குழந்தையாகிய முருகக்கடவுளது, திரு அரையில் கிண்கிணி ஓசை - திருவரையிற் கட்டிய கிங்கிணியின் ஓசை, பதினால் உலகமும் கேட்டது - பதினாலுலகங்களிலும் கேட்டது.

குறிப்பு: 1. மண்கமழுந்தித் திருமால் - (செ. 62. கு. 4. பார்.) உந்தி - வயிறு.

2. திருமால் வலம்புரி யோசையந்த விண்கமழ் . திருமால் கிருஷ்ணவதாரத்திலே தேவர்களை வென்று விண்ணுலகத்துள்ள பாரிசாத விருக்ஷத்தைப் பூமியிற் கொணர்ந்த வெற்றியைக் குறித்தது.

3. திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை திருவரையிற் கிங்கிணி... :- முருகக்கடவுள் பதினாலுலகத்தாரையும் தம்முள் அடக்கிக் கொடுமைசெய்த அசுரரை அழித்த வெற்றியைக் குறிப்பது. பதினாலுலகம் - மேலுலகேழும் கீழுலகேழும். மேலுலகு - (செ. 16. பார்.) கீழுலகு - அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம்.

7

(தா—ம்.) முருகக்கடவுள் பிரம விட்டுணுக்களினும் மேம்பட்ட பரம்பொருள் என்பது தோன்ற அவரது பராக்கிரமம் கூறப்பட்டது.

94. முத்தியடைதற்குபாயம்.

தெள்ளிய வேனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் றாள்வேட்டிலேசிறு வள்ளை தள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச் சொல்லை
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே. [நல்ல

(இ—ள்.) சிறு வள்ளை தள்ளித் துள்ளிய கெண்டையை - சிறிய வள்ளைக்கொடிகள்போலும் காதுகளைத் துரந்து துள்ளுகின்ற கெண்டை மீன்போலுங் கண்களையும், தொண்டையை - கொவ்வைக்கனிபோலும் வாயையும், தோதகச் சொல்லை - வஞ்சகம்பொருந்திய வார்த்தைகளையும், நல்ல வெள்ளிய நித்தில வித்தார மூரலை - நல்ல வெண்மையான முத்தையொத்த வித்தாரமான பற்களையும், வேட்ட நெஞ்சே - விரும்பிய மனமே, தெள்ளிய ஏனலில் கிள்ளையை - தெளிந்த தினைப்பயிரைக்காத்த கிளி போன்றவரும், கள்ளச் சிறுமி எனும் வள்ளியை - கள்ளப் புணர்ச்சிக்குரிய சிறு பெண்ணுமாகிய வள்ளிநாயகியை, வேட்டவன் தாள் வேட்டிலை - விரும்பி ஆட்கொண்டவராகிய முருகக்கடவுளின் திருவடிகளை விரும்பினையில்லை.

குறிப்பு: 1. தெள்ளுதல் - பக்குவமடைதல்.

2. தாள் - திருவருள்.

3. களவுப் புணர்ச்சி-கந்தருவமணம். தந்தை தாயர் அறியாது தலைவனுந் தலைவியுந் தம்முட்கூடும் புணர்ச்சி.

4. வள்ளை - ஒரு கொடி.

(தா—ம்.) சிற்றின்பத்தை விரும்பி உழலும் மனமே, முருகக்கடவுளுடைய திருவடிகளை விரும்பினையாயின் பேரின்பமுத்தி சித்திக்கும்.

95. உண்மைநிலை.

யான்று னெனுஞ்சொல் லிரண்டுங்கெட் டாலன்றி யாவருக்குந்
தோன்றுது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றுன் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினுற்
சான்றுரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே.

(இ—ள்.) யான் தான் எனும் சொல் இரண்டும் கெட்டால் அன்றி - யான் தான் என்னும் இரண்டு சொற்களாலுமுண்டாகும் மலவாசனை நீங்கினுலன்றி, யாவருக்கும் சத்தியம் தோன்றுது – ஒருவருக்கும் உண்மைநிலையாகிய சுகாதீதம் தோன்றுது, தொல்லைப் பெருநிலம் சூகரம் ஆய் கீன்றுன் மருகன் - பழைய பெரிய பூமியைப் பன்றியுருவங்கொண்டு கிழித்தவராகிய திருமாலின் மருகரும், முருகன் க்ருபாகரன்—இளமையுடையவரும் கருணகரருமாகிய முருகக்கடவுளின், கேள்வியினுல் சான்று - உபதேசத்தால் அமைந்து, ஆரும் அற்ற தனி வெளிக்கே வந்து சந்திப்பது – யாவருமற்ற வெறுவெளியிலே அந்நிலை வந்து கூடுவதாகும்.

குறிப்பு: 1. யான் தான் - யான் தான் எனப் பகுத்துக் காணும் உணர்வு. தான் – அவன், பதி. இம்மலவாசனை நீங்கினுலன்றிச் சிவாநந்தத்தை அநுபவித்தல் கூடாது. ''இருமை யொருமையில் பெருமையை'' ''நீயின்றி நானின்றி'' (திருப்புகழ்த் திரட்டு 109. 140). ''யான்றுனெனலறலே யின்பநிட்டை.'' (தாயுமா)

2. சத்தியம் - சுகாதீதமாகிய உண்மைநிலை, சிவப்பேறு.

3. கேள்வியினுற் சான்று - முருகக்கடவுள் உபதேசித்தபடி சாதனஞ் செய்து தத்துவச் சேட்டையும் தற்போதச் சேட்டையுமின்றி அருளில் அடங்கி.

4. ஆரும் அற்ற தனி வெளி–தத்துவங்கள் முதலியன கழன்ற அருணிலை.

(தா—ம்.) போதவாசனை நீங்கியவிடத்திற் சிவாநந்தம் உதயமாகும்.

96. திரோதானசத்தியின் தொழிலறல்.

**தடக்கொற்ற வேண்மயி லேயிடர் நீரத் தனிவிடினீ**
**வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் ரோகையின் வட்டமிட்டுக்**
**கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்**
**திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே.**

(இ—ள்.) தடக் கொற்றவேள் மயிலே - பெரிய வெற்றியையுடைய முருகக்கடவுளின் வாகனமாகிய மயிலே, இடர் தீர தனி விடின் - எனது பிறவித்துன்பம் நீங்கும்படி தனிமையாகிய சுத்த அருணிலையில் என்னை விடுவாயானல், கடற்கு அப்புறத்தும் - கடலுக்கு அப்பாலும், கதிர்க்கு அப்புறத்தும் - சந்திர சூரியர்களுக்கு அப்பாலும், கனக சக்ரத் திடர்க்கு அப்புறத்தும்—பொன்மயமான சக்கிரவாளகிரிக்கு அப்பாலும், திசைக்கு அப்புறத்தும் - எட்டுத்திசைகளுக்கும் அப்பாலும், வடக்கிற் கிரிக்கு அப்புறத்தும் - மேருமலைக்கு அப்பாலும், நின் தோகையின் வட்டம் இட்டு திரிகுவை - உனது தோகையால் வட்டமிட்டுப் பறந்து திரிவாய்.

குறிப்பு: 1. தடக்கொற்றவேள் மயில் - மலங்களைப் போக்கும் முருக வேளின் திரோதானசத்தி. கொற்றம்—வலி, வெற்றி.

2. தனிவிடில் - தத்துவங்களும் போதச்செயலும் நீங்கிய சுத்த அருணிலை.

3. வடக்கிற் கிரி - மேருமலை. அது சுத்தமாயையைக் குறித்துநின்றது.

4. கடல் - சமுத்திரம். அது கன்மங்களைக் குறித்து நின்றது. ஆன்மாக்களுக்குக் கன்மங்களை நுகர்விக்குந் தொழில் இல்லை என்றபடி.

5. கதிர் - சந்திர சூரியர்கள். கேவல சகலங்களைக் குறிப்பன.

6. கனக சக்ரத் திடர் - பிரகிருதிமாயை. அது மயக்கத்தைச்செய்வதனுற் ''கனக சக்ரத்திடர்'' என்ருர்.

7. திசை-எட்டுத்திசைகள். அசுத்தமாயாகாரியங்கள்.

(தா—ம்.) முருகக்கடவுளுடைய வாகனமே, சுத்த நிலையில் என்னை விடுவாயாயின், எனது பாசவிமோசனத்தை நாடிச் செய்யுந் தொழில் உனக்கில்லை என்பதாம்.

97. விட்டுணு திதித்தொழில் செய்தல்.

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணுமுடி தாக்க வதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா யுதமும் பணிலமுமே.

(இ—ள்.) சேலின் திகழ் வயல் - சேல்மீன்களால் விளங்குகின்ற வயல்கள் சூழ்ந்த, செங்கோடை வெற்பன் செழும் கலபி - திருச்செங்கோடு என்னும் மலையிலிருக்கும் முருகக்கடவுளுடைய அழகிய மயில்வாகனமானது, ஆலித்து அநந்தன் பணுமுடி தாக்க - ஆரவாரித்து ஆதிசேடன் என்னும் பாம்பின் முடிகளைத் தாக்குதலால், அதிர்ந்து அதிர்ந்து காலில்கிடப்பன - அசைந்து அசைந்து அம்மயிலுடைய கால்களின் கீழ்க்கிடப்பன, மாணிக்க இராசியும்-அம்முடிகளிலுள்ள மாணிக்கத்திரளும், காசினியைப் பாலிக்கும் மாயனும் சக்கராயுதமும் பணிலமுமே-பூமியைப் பாதுகாக்கும் திருமாலும் அவருடைய சக்கராயுதமும் சங்குமேயாம்.

குறிப்பு: 1. செழுங்கலபி ஆலித்தநந்தன் பணுமுடி தாக்க - முருகக்கடவுளது திரோதானசத்தியாகிய மயில் பிரகிருதிமாயையைக் காரியப்படுத்த. அநந்தன் - பிரகிருதிமாயை.

2. மாணிக்கராசி - பிரகிருதியிற்றோன்றிய தத்துவங்கள் இருபத்து நான்கும். முருகக்கடவுளின் சத்தி காரியப்படுத்துவதினால் தத்துவங்கள் தோன்றும் என்பதும் விட்டுணுமூர்த்தி தமது காக்குந்தொழிலைச் செய்வர் என்பதும் பெறப்படும்.

(தா—ம்.) முருகக்கடவுளின் ஆஞ்ஞையைக்கொண்டு திருமால் தந்தொழிலைச் செய்வர் என்பதாம்.

98. முத்திக்கேற்ற நெறியை வேண்டல்.

கதிதனை யொன்றையுங் காண்கின்றி லேன்கந்த வேன்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம் பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம் வேகின்றதே

(இ—ள்.) கந்த - கந்தசுவாமியே, வேல் முருகா - வேற்படையையுடைய முருகக்கடவுளே, நதிதனை அன்ன பொய் வாழ்வில் அன்பாய்—ஆற்றுநீர்ப்பெருக்கை ஒத்த நிலையில்லாத இவ்வுலகவாழ்க்கையில் அன்புடையேனாய், நரம்பால் பொதிந்த பொதிதனையும் கொண்டு - நரம்புகளாற் கட்டி மூடிய உடம்பாகிய பொதியையுங்கொண்டு, திண்டாடுமாறு - கலக்கமடையும்வண்ணம், எனைப்போத விட்ட விதிதனை நொந்து நொந்து - என்னைப் பிறவியிற் செல்லவிட்ட ஊழ்வினையை நினைந்து வருந்தி வருந்தி, என்றன் மனம் இங்கே வேகின்றது - எனது மனமானது இவ்விடத்து வேகின்றது, கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன் - முத்தியடைதற்கேதுவான வழி ஒன்றையும் பெற்றிலேன்.

குறிப்பு: 1. கதிதனை யொன்றையும்-முத்தியடைதற்கேதுவான சாதனங்கள்.

2. பொய்வாழ்விலன்பாய் - பிரபஞ்சப்பற்றுடையேனாய். பிரபஞ்ச போகங்களில் ஆசையை உண்டாக்குவது ஆணவமலம்.

3. நரம்பாற் பொதிந்த பொதி - மாயாகாரியமான உடம்பு.

4. திண்டாடுதல்-சஞ்சிதவினையின் பயனாகிய இன்பத் துன்பங்களை அநுபவித்தல்.

(தா—ம்.) முருகக்கடவுளே, எனது மல மாயை கன்மங்களை நீக்கி உமது திருவடியை அடைதற்கேதுவான வழியைக் காட்டியருள்வீராக.

99. திருவடிக்கிரங்கல்.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோற்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.

(இ—ள்.) தூவிக் குலமயில் வாகனனே - சிறகுக் கூட்டத்தையுடைய மயிலை வாகனமாகவுடையவரே, தாவிப்படரக் கொழு கொம்பு இலாத தனிக் கொடிபோல் - தாவிப்படர்வதற்குக் கொழுகொம்பு இல்லாத தனிமையாகிய கொடியைப்போல, பாவித்தனிமனம்—தீமை பொருந்திய தனிமையான அடியேனுடைய மனமானது, துணை ஏதும் இன்றி—உதவி சிறிதும் இல்லாமல், தள்ளாடி வாடிப் பதைக்கின்றது - அசைந்து சோர்ந்து துடிக்கின்றது. ஆதலால், காவிக் கமலக் கழலுடன் சேர்த்து என்னைக் காத்தருளாய்-செந்தாமரை மலர்போன்ற உமது திருவடிகளோடு அணைத்து அடியேனை இரட்சித்தருள்வீராக.

குறிப்பு: கொழு கொம்பு - கொடிகள்பற்றியேறிப் படருதற்கு நட்டகொம்பு, பற்றுக்கோடு.

(தா—ம்.) ஆதாரமின்றித் தளர்ந்துநிற்கும் அடியேனுக்குத் தேவரீர் திருவடிகளைப் பற்றுக்கோடாகத் தந்தருள்வீராக.

## 100. அடியார் மகிமை.

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட் டியவா கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

(இ—ள்.) கிரௌஞ்ச வெற்பை அடுதலைச் சாதித்த வேலோன் - கிரௌஞ்சமலையைப் பொடியாக அழித்த வேற்படையையுடைய முருகக்கடவுள், பிறவி அற-எனது பிறவி நீக்கும்பொருட்டு, இடுதலைச் சற்றும் கருதேனை போதம் இலேனை-இரப்போருக்குக் கொடுப்பதைச் சிறிதும் நினையாதவனும் ஞானமில்லாதவனுமான அடியேனை, அன்பால் - தமது பேரன்பால், கெடுதல் இலாத் தொண்டரில் கூட்டியவா - அழிவில்லாத தமது அடியாரோடு சேர்த்த முறைமை என்ன வியப்புடையதாயிருக்கிறது. அங்ஙனம் கூட்டியதனால், பாசவினை விலங்கு விட்டது - பாசவினையாகிய கட்டு ஒழிந்தது, இச்சிறை விடுதலைப் பட்டது - தனுகரணங்களுட் கிடக்கும் இச்சிறையும் நீங்கிற்று.

குறிப்பு: 1. கெடுதலில்லாத் தொண்டர்- பிறப்பிறப் பற்ற அடியவர்.

2. சிறை விடுதலைப்படல் - மாயாமலம் நீங்கல்.

3. பாசவினை - ஆகாமியவினை. இது சஞ்சிதமாய்ப் பிறவியைக் கொடுக்குமாதலால் ''விலங்கு'' என்றார். ஆகாமியவினை ஏறாதிருத்தலாற் சஞ்சிதவினையுமில்லை. அதனால்வரும் மாயாகாரியமான உடம்புமில்லை என்றபடி.

(தா—ம்.) முருகக்கடவுள் தமது அடியாருடன் என்னைக் கூட்டினபடியால் எனக்கு இனிப்பிறப்பில்லை என்று அடியார் மகிமை கூறப்பட்டது.

### 101. நூற்பயன்.

**சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்**
**துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்**
**கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தனன்னூல்**
**அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே.**

(இ—ள்.) நன்னூல் - நல்ல நூலாகிய, கந்தன் அலங் காரம் நூற்றுள் - கந்தரலங்காரக்கவிகள் நூற்றுள், ஒரு கவிதான் கற்று அறிந்தவர் - ஒரு கவியையாயினும் கற்று அதன் பொருளை அறிந்தவர், சலம் காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார் — இவ்வுலகத்திலே பெருங் கோபஞ் செய்யும் அரசருக்கும் அஞ்சமாட்டார், யமன் சண்டைக்கு அஞ்சார் - இயமன் செய்யும் போருக்கும் அஞ்சமாட்டார், துலங்கா நரகக் குழி அணுகார் - இறந்தபின்னர் இருள டைந்த நரகக்குழியையும் அடையார், துட்ட நோய் அணுகார் — இவ்வுடலோடிருக்கும்பொழுது தீயநோயும் அணுகப்பெறார், புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கலங் கார் - துட்டமிருகங்களாகிய புலிக்கும் கரடிக்கும் யானைக் கும் மனங்கலங்கமாட்டார்.

குறிப்பு: 1. சலம் - பெருங்கோபம்.

2. துலங்கா நரகக்குழி - பிரகாசமில்லாத நரகக்குழி; எனவே இருளடைந்ததாம்.

(நா—ம்.) கந்தரலங்காரத்தை நியமமாகப் பாராய ணஞ்செய்வோர், இம்மையில் இராசபயம் முதலிய துன் பங்களும், மறுமையில் நரகத்துன்பமும் அடையார் என்பதாம்.



சில பிரதிரூபங்களிலே அதிசமாகக் காணப்பட்ட செய்யுள்கள்.

1. குருதெரிசனம்.

**திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்**
**பொருவடி வேலுங் கடம்புந் தடம்புய மாறிரண்டும்**
**மருவடி வான வதனங்க ளாறு மலர்க்கண்களுங்**
**குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.**

(இ—ள்.) திருவடியும் - முருகக்கடவுளுடைய திருவடிகளும், தண்டையும் சிலம்பும் — அத்திருவடிகளில் அணிந்த தண்டையும் சிலம்புகளும், சிலம்பு ஊடுருவப் பொருவடிவேலும் — கிரௌஞ்சமலை துளைபடும்படி போர்செய்த கூர்மையான வேற்படையும், கடம்பும் - கடப்பமலர்மாலையும், தடம் புயம் ஆறிரண்டும் — அகன்ற புயங்கள் பன்னிரண்டும், மருவடிவு ஆன ஆறு வதனங்களும்—ஒன்றுடன் ஒன்று பொருந்திய உறுப்புக்களாகிய ஆறு திருமுகங்களும், மலர்க் கண்களும்—தாமரைமலர்போலும் பன்னிரண்டு திருக்கண்களும் ஒன்ருகச் சேர்ந்து, குருவடிவாய் வந்து—குருமூர்த்தமாய் எழுந்தருளிவந்து, என் உள்ளம் குளிர - எனது மனமானது குளிரும்படி, குதிகொண்ட - ஆநந்தக்கூத்தாடின.

குறிப்பு. 1. திருவடி தண்டைமுதலியனவற்றுள்ளே திருவடி, புயமாறிரண்டு, வதனங்களாறு, கண்கள் என்பன பிரத்தியங்கங்கள். வேல் சாங்கம். தண்டை, சிலம்பு, கடம்பு உபாங்கங்கள், இவையெல்லாம் அருள்வடிவாயுள்ளன. அருள்வடிவாயுள்ள இவை ஒருங்கு சேர்ந்து குருவடிவாய்த் தோன்றி எனது மனத்துயரத்தை நீக்கின என்பது பொருள். மனத்துயரமாவது ஞானசாரியரை என்று அடைவோம் என்னும் காதல்.

2. குதிகொள்ளல் - ஆநந்தக் கூத்தாடல். ''செந்திலிலுமென்றன்முன் கொஞ்சி நடனங்கொளுங் கந்த வேளே.'' (திருப்புகழ்த்திரட்டு செ. 89.)

(தா—ம்.) எனது காதல் தீரும்படி முருகக்கடவுள் குருவடிவாய் என்முன் எழுந்தருளி வந்தார் என்பதாம்.

2. அருணிலை வேண்டல்.

இராப்பக லற்ற விடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுண்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

(இ—ள்.) கரி கூப்பிட்ட நாள் - கஜேந்திரன் என்னும் யானையானது (ஆதிமூலமே என்று) கூப்பிட்ட நாளில், கராப்படக் கொன்று அக்கரிபோற்ற நின்ற கடவுள் மெச்சும் - அதனைக் கவ்விய முதலை அழியும்படி கொன்று அந்த யானை துதிக்கின்ற திருமாலும் பாராட்டுகின்ற, பராக்ரம - சரீரசாமர்த்தியத்தை உடையவரே, வேல - வேற்படையையுடையவரே, நிருத சங்கார - அசுரரை அழிப்பவரே, பயங்கரனே - அசுரருக்குப் பயத்தைச்செய்பவரே, இராப் பகல் அற்ற இடம் காட்டி - கேவலசகலங்களற்ற அருள்நிலையைக் காட்டி, யான் இருந்தே துதிக்க - அடியேன் அந்நிலையிலிருந்து துதிக்கும்படி, குராப்புனை தண்டை அம் தாள் அருளாய் - குராமலர்மாலை அணிந்த தண்டையைத்தரித்த உம்முடைய திருவடிகளைத் தந்தருள்வீர்.

(தா—ம்.) கேவலசகலங்களற்ற சுத்தநிலையிலிருந்து உம்மைத் துதிக்கும்பொருட்டு அடியேனுக்கு உமது திருவருளைத் தருவீராக.

3. அநுபவநிலை தெரிவித்தல்.

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்
கொங்கேய் தரளஞ் சொரிபுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினு மங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

(இ—ள்,) பதும மலர்க் கொங்கேய் தரளம் சொரியும் செங்கோடைக் குமரன் என எங்கே நினைப்பினும் - தாம

ரைப்பூவானது தாதுபோன்ற முத்துக்களைச் சொரிகின்ற திருச்செங்கோட்டுமலையிலுள்ள குமரக்கடவுள் என்றுயான் எவ்விடத்தே நினைத்தாலும், அங்கே - அவ்விடத்திலே, செம் கேழ் அடுத்த சினவடி வேலும் - சிவந்த நிறம்பொருந்திய கோபத்தையுடைய கூரிய வேற்படையும், திருமுகமும் - ஆறுதிருமுகங்களும், பங்கே நிரைத்த நல் பன்னிரு தோளும் - பக்கங்களிலே வரிசையாயிருக்கின்ற நல்ல பன்னிரண்டு திருப்புயங்களும்கொண்டு, என் முன் வந்து எதிர்நிற்பன் - அவர் எனக்கு முன்பாக வந்து எதிரே நின்றருளுவர்.

குறிப்பு. 1. கொங்கேய் தரளம் - முத்துக்குப் பிறப்பிடம் இருபத்தொன்று. அவற்றுள் தாமரைப்பூ ஒன்று. கொங்கு - பூந்தாது. கொங்கு ஏய் - பூந்தாதை ஒத்த.

2. பங்கே நிரைத்த - பக்கங்களிலே நிரையாயிருக்கின்ற. அவருடைய முகங்கள் எப்பக்கங்களிலுமுளவாதலின் அங்ஙனம் கூறினர்.

(தா—ம்.) திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளே என்று அடியேன் எவ்விடத்து நினைத்தாலும், அவ்விடத்தே அவர் தமது வேற்படை முதலியவற்றோடு எனக்கெதிரே தோன்றிநிற்பர்,

4. வினைநீக்கம் வேண்டல்.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க வென்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே.

(இ-ள்.) வாவித் தடவயல் சூழும் - குளங்களையுடைய பரந்த வயல்கள் சூழப்பெற்ற, திருத்தணி மாமலை வாழ் - திருத்தணிகையாகிய பெரியமலையில் எழுந்தருளியிருக்கும், சேவல் கொடியுடையானே - கோழிக்கொடியையுடையவரே, அமர சிகாமணியே - தேவர்களுக்கு முடிமணிபோன்

றவரே, ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்து - உயிருக்கு ஆகாமியவினையாகிய கேடுவந்துபொருந்தும் முறைமையை அறிந்து, உன் அருள் பதங்கள் சேவிக்க என்றும் நினைக்கின்றிலேன் - உமது அருளாகிய திருவடிகளை வழிபட எக்காலமும் உணருகின்றேனில்லை, வினை தீர்த்தருளாய் - எனது சஞ்சிதவினையை நீக்கியருள்வாய்.

குறிப்பு. 1. ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்து:— பிராரத்தவினையை அநுபவிக்கும்பொழுது நிகழும் விருப்பு வெறுப்புக்களால் நல்வினை தீவினைகள் செய்யப்படும். இந்த நல்வினை தீவினைகள் ஆகாமியவினை எனப்படும். வருமாறு அறிதல் - நல்வினை தீவினைகளுக்குக் காரணம் விருப்புவெறுப்புக்களென்றறிதல். திருவருள் தோன்றுமிடத்து ஆகாமியவினை ஏறுதாகையால், அருட்பதங்கள் சேவிக்க என்றும் நினைக்கின்றிலேன் என்றார்.

2. வினைதீர்த்தருளாய் - நல்வினை தீவினைகளால் வரும் புண்ணிய பாவங்கள் சஞ்சிதவினை எனப்படும். அச்சஞ்சிதவினை நீங்கியவிடத்துப் பிறப்பிறப்பும் நீங்குமாதலால், வினைதீர்த்தருளாய் என்றார்.

(தா—ம்.) முருகக்கடவுளே! எனது சஞ்சிதவினையை நீக்கி ஆகாமியவினை ஏறுதபடி அருள்வீராக.

பிரபஞ்சப்பற்று நீங்க வேண்டல்.

கொள்ளித் தலையி லெறும்பது போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே.

(இ—ள்.) ஒருகோடி முத்தம் தெள்ளிக்கொழிக்கும் கடல் - எண்ணிலவாகிய முத்துக்களைத் தெள்ளிக்கொழிக்குங் கடலையுடைய, செந்தின் மேவியசேவகனே - திருச்செந்திற்பதியில் எழுந்தருளியிருக்கும் வீரரே, வள்ளிக்கு வாய்த்தவனே — வள்ளிநாயகியாருக்குச் சிறந்ததலைவரே,

*மயில் ஏறிய மாணிக்கமே* - மயில்வாகனத்தில் ஏறியருளும் மாணிக்கம்போல்பவரே, *கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையும்* — இருதலைக் கொள்ளியினிடத்தே நடுவிலே அகப்பட்ட எறும்பைப்போல உலைகின்ற, *என்றன் உள்ளத்துயரை ஒழித்தருளாய்* — எனது மனத்துயரை நீக்கியருள்வீராக.

குறிப்பு. 1. *கொள்ளித்தலையிலெறும்பதுபோல....* மனை மக்கள் சுற்றம் என்னும் மாயாவலையில் அகப்பட்டுத் தவிக்கின்ற அடியேன் துயரத்தை என்பது.

2. வள்ளிக்கு வாய்த்தவன் - பேராநந்தத்தைக் கொடுப்பவர்.

3. *மயிலேறிய மாணிக்கம்* - திரோதானசத்தியால் மலங்களை நீக்குபவர்.

(தா—ம்.) முருகக்கடவுளே! பிரபஞ்சவாழ்வைப்பற்றி அழுந்தும் அடியேன் துயரத்தைநீக்கிப் பேரின்பவாழ்வைத் தந்தருளுவீராக என்பதாம்.

6. *அருணிலையினிற்றலால் இயமபயமில்லை.*

**சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்**
**காலன் றனக்கொரு காலுமஞ் சேன்கடன் மீதெழுந்த**
**ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்**
**வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.**

(இ—ள்.) *கடல்மீது எழுந்த ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்* - பாற்கடலில் உண்டாகிய நஞ்சை உண்டருளிய இறைவராகிய பரமசிவனுடைய குமாரராகிய ஆறுமுகக்கடவுளுடைய, *வேலும் திருக்கையும் ஒரு மெய்த்துணை நமக்கு உண்டு* - வேலாயுதமும் திருக்கரங்களும் ஒப்பற்ற உண்மைத்துணையாக நமக்கு உள்ளன. ஆதலால், *சூலம் பிடித்து எமபாசம் சுழற்றித் தொடர்ந்து வரும் காலன் தனக்கு ஒரு காலும் அஞ்சேன்* - சூலா

யுதத்தைக் கையிற்பிடித்துக்கொண்டும் இயமனுடைய பாசக்கயிற்றைச் சுழற்றிக்கொண்டும் தொடர்ந்துவருங் காலனுக்கு யான் ஒருகாலும் அஞ்சேன்.

குறிப்பு. 1. இயமன் - மரணத்துக்கு அதிகாரியும், நரகத்துக்கு அரசனுமாய்த் தெற்குத்திசையிலிருப்பவன்.

2. காலன் - இயமனுக்கு மந்திரியாய் உயிர்களின் இறுதி அறியுந்தொழின் முதலியனவுடையவன்.

(தா—ம்.) முருகக்கடவுளது வேலாயுதமும் திருக்கரங்களும் மெய்த்துணையாயிருத்தலால் யான் இயமனுக்கு அஞ்சேன்.

———

# பாட்டு முதற்குறிப்பகராதி

எண்கள் பக்கங்களைக் குறிக்கும்